## ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
### இயற்றிய மிகச் சிறிய நூல்கள்

| | | |
|---|---|---|
| மாணிக்கன் | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| சைவன் யார்? | ... | 1-25 |
| ஆலய வழிபாடு | ... | 1-25 |
| மனிதனது நிஜ சொரூபம் | ... | 1-25 |
| சிவதத்துவம் | ... | 1-25 |
| ஆத்ம சக்தி | ... | 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| கணபதி | ... | 1-00 |
| நன்நெறிகளும் அருள் வாக்குகளும் | ... | 0-80 |
| சூரிய நாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| முருகக் கடவுள் | ... | 0-75 |
| வர்ணாச்ரம தர்மம் | ... | 0-70 |
| தாயுமான சுவாமி ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| விவேகானந்தரின் வீரகர்ஜனை | ... | 0-40 |
| கந்தர் அனுபூதி | ... | 0-30 |

**விவரங்களுக்கு:**


**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
*திருப்பராய்த்துறை-639 115*

# தவப் புதல்வர்கள்

இயற்றியவர்
ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1983



# தவப் புதல்வர்கள்

## காட்சி 1.

### கங்கைக் கரை

*(வால்மீகி முனிவரின் ஆச்ரமத்தை அடுத்துள்ள காடு. லக்ஷ்மணன் ஸீதையைக் காட்டுக்கு அழைத்து வந்திருக்கிறான்.)*

*ராகம்: ஹம்ஸத்வனி* **கோரஸ்** *தாளம்: ஆதி*

ஸ்ரீ ராகவாதேவா ஸ்ரீரமணா சீதாபதே—(ஸ்ரீராகவ)
பூமாதா வில்பூணும் மாயா விநோதாஹரி
ரகுகுலத்தின் சிறந்த சீலா உன்
கழலே பணிவோம் கருணை புரிவாயே (ஸ்ரீராகவ)

*சரணம்*

தந்தை தாயின்சொல் தவரு நெறியாய்
தரணியோர் உளம்தனிலே மகிழ்வாய்
தந்தை குருவாக தம்பியர் போற்ற
தரணிமேலோரும் தாழ்ந்தடி போற்றும்

*[ரகுகுலத்தின் சிறந்த]*

லக்ஷ்மணன்: *ஆ! அண்ணலே, தம் உத்தரவுப்படியே சீதாபிராட்டியாரை வனத்திற்கு அழைத்து வந்தாய் விட்டது. வனத்தில் அவள் விருப்பமாய் விளையாடித் திரிகிறாள். இன்னும் சிறிது நேரத்தில் நான் அவளை இங்கே விட்டுவிட்டு அயோத்திக்குத் திரும்பிவிடுவேன் என்பது அவளுக்குத் தெரியாது. மாசு இல்லாத மாதரசி இப்பொழுது மகிழ்ந்து குலாவித் திரிகிறாள். இன்னும் சிறிது நேரத்தில் குற்றம் சாட்டப் பட்டவளாகக் கதறிப் பதறி அழப் போகின்றாள்! நேற்று அயோத்*

*திக்கு அரசி. இன்று இரவு அடவியில் தன்னந்தனியாக அழுது புரண்டு, ஆதரிப்பாரில்லாது அல்லற்படப் போகின்ருள்.*

*ராகம்: ஹிந்துஸ்தான்காபி* *தாளம்: ஆதி*

1

அன்பு மிகும் ராமண்ணுதம் ஆக்கினை போல் அண்
அஞ்சிடாமல் நெஞ்சம் துணிந்(து) [ணியாரை
ஆரண்யம் சேர்த்தே ஞன்பாவி

2

போற்றும யோத்தி நகரில் நேற்றரசியாயிருந்தாள்
பூவையின்று காட்டில் நின்று
புலம்பித் தவிக்கப் போகிருள்

3

மானிடவாழ்க்கையின் தன்மை நானறியலா
வாழ்வதுவும் தாழ்வதுவும் [னேனின்று
மாய மாயிருக்கு தந்தோ

4

பாவம் பழியேதுமறி யாதஸீதா தேவிதன்னை
பாழ் வனத்தில் தான் விடுத்த
பாதகத்திற் கென் செய்வேனுன்

*ஆ! இந்த மண்ணுலக வாழ்வும் ஒரு வாழ்வா? இன்புற்றிருக்கின்றவர்களுக்குத் துன்பம் எந்தவேளையில் என்னவடிவில் வரும் என்பதை யாருமறியார். இனி வரப்போவது யாது என்பதை இன்னதென்று காட்டாது காலம் என்னும் திரை மறைத்து வைத்திருப்பது ஒருவிதத்தில் உத்தமமானது.*

என் தமையன் ரகுராமன் கர்த்தா; நான் கருவி. அவருக்குப் பணிவிடை செய்வதைத்தவிர வேறு நாளென்றும் அறியேன். ஆண்டவன் ஆட்டுவித்தபடி ஆடுகின்றவர்களுக்குத் துன்பமொன்றுமில்லை என்கின்றனர் சான்றோர். ஆனால் இன்று நான் அவ்விதிக்கு விலக்காகிவிட்டேன். எனக்கு ஸீதையும் ராமனும் ஒன்று. ஸீதையை வனத்தில் விட்டுவிடுவது எனக்குக் கடமையாய் அமைந்திருக்கிறது. இது கொடியதிலும் கொடியது. ஆயிரம் தடவை சாவது எளிது. இத்தகைய கொடிய செயலைச் செய்ய எந்த வீரன்தான் துணிவான்! அதோ, ஸீதை வனத்தைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருகிறாள். என் துயரத்தை மறைக்க முயலுவேன்.

(ஸீதை வருகிறாள்)

ஸீதாதேவி: லக்ஷ்மணா, கங்கைக்கரையில் மறுபடியும் சிலநாட்கள் வசிக்கவேண்டும் என்று என் உள்ளத்தில் வெகு நாட்களாக ஏற்பட்டிருந்த அவா இன்றுதான் நிறைவேறிற்று. இதோபார், தன் சிற்றலைகளாகிய கைகளினால் கங்காதேவி என்னை எவ்வளவு அன்புடன் அழைக்கின்றாள்! நறுமணத்தையும் நீர்த்திவலைகளையும் சேர்த்து வீசும் காற்று நம் களைப்பை எவ்விதம் நீக்குகிறது பார்த்தனையா? இவ்வியற்கை அழகுக் காட்சிகளை நாம் அயோத்தியில் பெறமுடியுமா?

லக்ஷ்மணன்: ஆம் தாயே! தாங்கள் சொல்வது முற்றிலும் சரி. ஆதலால்தான் முனிவர்கள் நகரங்களை நரகங்களைப் போல் வெறுக்கின்றனர். நானும்கூட நகரத்திற்குத் திரும்பாமல் இங்கேயே தங்கிவிட்டால் எவ்விதம் மகிழ்வேன் என்பதை நீங்கள் அறிய முடியாது.

ஸீதா: ஆம் லக்ஷ்மணா! எல்லாம் சரியே. நானும் ஏதோ புதிதாகக் கங்கையைக் கண்ட மகிழ்ச்சியினால் எதை எதையோ பிதற்றிவிட்டேன். நான் இவ்விதம் பேசிய தற்காக வருந்துகின்றேன்.

லக்ஷ்மணன்: ஏன் தாயே, அவ்வாறு பேசுகின்றீர்?

ஸீதா: என் கண்போன்ற, என் உயிர்போன்ற, என் தெய்வமாகிய ரகுராமன் இல்லாவிடில் எந்த இடமும் அழகு குன்றிவிடுகிறது. நானே விரும்பி வந்தபொழுதி லும் என் கணவன் ராமனை விட்டுத் தனியே வந்ததைக் குறித்து வருந்துகின்றேன்.

(லக்ஷ்மணன் முகத்தின் தோற்றம் மாறுகின்றது. கலங்கு கிறான், தலைகுனிந்து பேசாது நிற்கிறான்.)

ஸீதா: லக்ஷ்மணா, ஏன் பேசாது நிற்கிறாய்! நான் சொல் வதில் ஏதாவது தவறுள்ளதோ! ஏனோ நாழியாக ஆக கங்கைகூட என் மனதைக் கவரும் திறமையை இழந்து விட்டாள். என்ன காரணம் என்று இப்போதுதான் விளங்குகிறது. அப்போது ராமனுடன் நான் வந்தேன். கங்கையும் தண்டக வனமும் இன்பத்தை அளித்தன. இப்போதோ என் நாயகன் அருகில் இல்லை. அதனால் இன்பம் ஏற்படவில்லை. இதுவே உண்மை.

(லக்ஷ்மணன் கண்களினின்று நீர் உதிர்க்கிறான்)

ஸீதா: லக்ஷ்மணா, உனக்கும் என்னால் ராமன் நினைவு வந்து விட்டதா? அதனால் தான் இந்த வாட்டமோ, சொல் அப்பா?

லக்ஷ்மணன்: ஐயோ! நான் என்ன சொல்வேன் அம்மா. எதுவும் தோன்றவில்லையே.

பும், பின்பு [illegible] மணமாவதற்கு முன் பிலும் ராமனை விட்டுப் பிரிந்திருந்தேன். உனக்கு [illegible] கைய பிரிவு ஒருநாளும் ஏற்பட்டதில்லை. அத்தகைய நீ இன்று ஒருநாள் பிரிந்து வந்ததைக் குறித்து வருந்து கின்றாய் போலும். மைந்தா, வருந்தாதே. நாம் விரை வில் திரும்பிவிடலாம். லக்ஷ்மணா, என் மனதில் ஏன் ஒரு மாதிரி நடுக்கம் ஏற்படுகிறது? ஏதோ தீமை ஏற் படுமோ என அச்சம் அடைகிறேன். சரி சரி, பார்த்தது போதும்; தேரைத் திருப்பு. அயோத்தி செல்லலாம்.

லக்ஷ்மணன்: தாயே! நான் என்ன சொல்லுவேன். ஒன் றும் தோன்றவில்லையே.

ஸீதா: லக்ஷ்மணா, உன் போக்கு எனக்கு கவலையைத் தரு கிறது. மனதில் உள்ளதை மறைக்காமல் கூறு.

லக்ஷ்மணன்: தாயே! என் அன்னை என்னைத் தோற்று விக்காமலேயே இருந்திருக்கக் கூடாதா? நான் என்ன பாவம் செய்தேனோ! நான்தானா இக்கொடிய செயலுக்கு ராமனிடம் கருவியாக இருக்கவேண்டும்?

ஸீதா: (பதற்றத்துடன்) லக்ஷ்மணா, உண்மையைச் சொல்ல மாட்டாயா?

லக்ஷ்மணன்: தாயே, தாங்கள் அயோத்திக்குத் திரும்பு வதற்கு நம் அரசரிடமிருந்து அனுமதியில்லை.

ஸீதா: ஏன் லக்ஷ்மணா! இங்கு வரவேண்டும் என்று நான் அடிக்கடி கேட்டதில் என் நாதன் சினம் கொண்டாரா? அதற்கு இவ்வளவு கொடிய தண்டனையா?

லக்ஷ்மணன்: அப்படி அல்ல அம்மா! தங்களை என் அண்ணன், தங்கள் மணாளன், அயோத்தி மன்னன்,

அறநெறி பிறழா வேந்தன் — ஆ! மேலே எப்படிச் சொல்வேன் — [illegible]னாகவேண்டும். குடிகளுக்காகக் கொற்றவன் தம்மைத் துறந்துவிட்டார்.

(ஸீதை சோர்வுற்றுத் தரையில் சாய்கிருள். லஷ்மணன் தலை குனிந்து நிற்கின்ருன். ஸீதை பிரக்ஞை பெற்று எழுந்திருக்கிருள்)

ஸீதா: அரசர் ஆக்ஞை பிறழாத இளையோய்! நான் என்ன செய்வேன்! அறிவு மங்குகிறதே. நான் கேட்பதும், நீ சொல்வதும் உண்மைதானு! லக்ஷ்மணு என் மனதைச் சோதனை செய்கின்ருயா? விளையாட்டிற்காகக் கூட நீ இவ்விதம் பேசமாட்டாயே! மகனே, நான் என்ன குற்றம் செய்தேன்? எதற்காக இக்கொடிய தண்டனை?

லக்ஷ்மணன்: அன்னையே, அரக்கர் வீட்டில் தனியாக வசித்த தங்களை தங்கள் மணுளன் ஏற்றதைச் சில அறிவிலிகள் தவறெனப் பேசினராம்.

ஸீதா: ஆ! லக்ஷ்மணு, என்னையுமா பேசினர்? ஏ அக்னி தேவா, தேவர்களே! கொடிய சோதனைக்குப் பிறகுமா எனக்கு இத்திட்டுதல். தெய்வங்களிடத்தும் பொது மக்களுக்கு நம்பிக்கையில்லையா!

லக்ஷ்மணன்: தாயே, தாங்கள் தூய்மையின் வடிவு என்றும் கற்பினுக்கு அரசி என்றும் அக்னி தேவர் சொன்னதையே அவர்கள் நம்பமுடியாதாம்.

ஸீதா: அவர்கள் நம்பாவிடில் போகட்டும். கண்களால் நேரில் பார்த்த உனக்கும் உன் அண்ணனுக்கும் கூடவா நம்பிக்கையில்லை?

லக்ஷ்மணன்: (செவிகளை மூடிக்கொள்கிருன்) தாயே எங்களைப் பொறுத்தமட்டில் சோதனை ஒன்றும் வேண்டி

யதே இல்லை. நாங்கள் உங்கள் உறவினராய் இருப்ப தால் எங்கள் பேச்சைப் பொதுமக்கள் நம்பமுடியாதாம்.

ஸீதா: லக்ஷ்மணா, ஆ இது என்ன நியாயம்? ஒரு சோத னையை உலகில் உள்ள எல்லோர் எதிரிலும் எவ்வாறு செய்யக்கூடும்? ஒரு சிலர் பார்க்காவிடில் அதைப் பொய்யெனக் கூறிவிடுவதா? எல்லோருக்கும் பொது வானவரும் செங்கோல் தாங்கியிருப்பவருமான பேர ரசன் பார்த்தால் போதாதா?

லக்ஷ்மணன்: தாயே! அண்ணாவின் சொல்லை மனைவியின் விஷயத்தில் மட்டும் நம்பமுடியாதாம். அதற்கு அண்ணா தான் என்ன செய்வார்? மன்னவன் மற்றவர்களுக்கு யாண்டும் வழிகாட்டியாக இருந்தாகவேண்டும் என்று எண்ணியே இச்செயலில் இறங்கியுள்ளார்.

ஸீதா: உண்மை! என் கணவன் தமது பாதுகாப்பிலுள்ள குடிகளின் மனம் நோகாமல் இருக்கத்தான் தம் மனைவி யையும் துறக்கத் துணிந்தார். அதைக் குறித்து நான் வருந்தலாகாது. ஆனால் நான் குற்றமற்றவள் என்பது அவருக்கு நன்கு தெரியும். நிரபராதியாகிய பெண்பால் ஒருத்தியை ஆதரிப்பாரில்லாது காட்டில் விட்டுவிடுவது கொற்றவனுக்கு முறையா? அவருடைய மனச்சாட்சி இதற்கு இடம் தருகிறதா?

லக்ஷ்மணன்: தாயே! தங்கள் கேள்வி முற்றிலும் பொருத்த மானது. ரகுகுல திலகத்திற்கு இப்பொழுது இரண்டு பெரிய கடமைகளுக்குள் எந்தக் கடமைக்கு முதன்மை கொடுப்பது என்ற சோதனை ஏற்பட்டிருக்கிறது. தங்க ளுக்கு அவர் கணவன் என்பது ஒரு கடமை. குடிகளுக் குக் காவலன் என்பது இரண்டாவது கடமை. இவ்

விரண்டிற்கும் இடையில்தான் இப்பொழுது போராட்டம். ஏதேனும் ஒருவிதத்தில் அவர் தாமே தங்களுக்குப் பாதுகாப்பு அமைத்து வைத்தால் மனைவியின் மீது வைத்த பற்றுதல், தர்மத்தை மீறி என்னென்னவோ வடிவெடுத்து வருகிறது என்று மக்கள் பொருட்படுத்துவர். இந்த அவதூறு ராமராஜனுக்குப் பொருந்தாது.

ஸீதா: லக்ஷ்மணா, நீ சொல்வது சரியே. ஆனால் எனக்கு விதியினின்றும் விடுதலை எளிதில் கிடைக்காது போல் தோன்றுகிறது. என் வயிற்றில் இருக்கும் எதிர்காலத்திய அயோத்தி மன்னனைப் பாதுகாக்கும் பொறுப்பு அலாதியாக என்னுடையதாக இருக்கிறதே! நான் என்ன செய்வேன்? தற்கொலை செய்துகொள்வதற்குக் கூட உரிமை எனக்கில்லாது போயிற்றே.

லக்ஷ்மணன்: தாயே! நாம் மூவரும் மனதிற்கொவ்வாத செயலையே செய்கிறோம். உலகையே துறந்துவிடலாமா! கங்கையில் குதித்து விடலாமா என்றெல்லாம் எனக்குத் தோன்றுகின்றது. ஆனால் என் தந்தை தசரத மன்னரும் அண்ணன் ராமனும் மிகக் கொடிய செயல்களைத் தங்கள் கடமையெனச் செய்திருக்கிறார்கள். நான் மட்டும் அஞ்சுவது கோழைத்தனமாகும். அண்ணனுக்காக உயிரைவிட வேண்டிய நிலைமை ஏற்பட்டால் அதையும் செய்யத் தயங்கமாட்டேன். அண்ணன் பூஜிக்கும் தர்மதேவதையும், தாங்கள் சேவிக்கும் கற்பு தேவதையும் தங்களை இக்காட்டில் காக்கவேண்டும். என் அண்ணனைக் குறைகூற வேண்டாம். அவர் தம் மனதிற்கொவ்வாததைச் செய்து எரிந்து வருந்துவது ஒன்றே அவருக்குப் போதுமானது. பொதுநல சேவை

*யில் ஈடுபடுபவர்களுக்குக் கிடைக்கக் கூடிய பேறு இதுவே. செல்கிறேன்.*

*(லக்ஷ்மணன் வணங்கிவிட்டுப் போகிருன்.)*

ஸீதா : *லக்ஷ்மணு, நீயும் சென்று விட்டால் என் நிலைமை தான் என்ன, கொடிய விலங்குகளுக்கு இரையாளுல் என்செய்வேன். நாதா !*

*ஸீதை புலம்பல்*

*ஸரஸீருகா என்ற வர்ணமெட்டு*

*ராகம் : முகாரி* *தாளம் : ஆதி*

**பல்லவி**

எழில் நாயகா மகா வைபோகா
ஏழை நானே பெண்டீர் என்னகுற்றம் கண்டீர் (எழில்)

***அனுபல்லவி***

பழிபாவம் ஒன்றும் அறியாத என்னை
பாழ்வனம் துரத்த பாதகமென் செய்தேன்

***சரணம்***

ஆறுமாத கர்ப்பம் ஆனவள் நானன்றோ
ஆரண்யத்தில் தனியாய் விடுத்தல் நன்றோ
ஆறுதல் செய்தென்னை ஆதரிப்பாருண்டோ ?
ஓ என் நாதா! ஓ என் ராமா! ஓ என் ராகவா!
ஓ என் பிரபு! ஓ என் பிரியா! ஓ என் பிராணேசா!

*(மூர்ச்சையாகிருள்)*

# காட்சி 2.

## கங்கைக்கரை

*(வால்மீகி கங்கையில் நீராடச் செல்கிறார், மாலை நேரம்)*

வால்மீகி : *ஏனோ என் மனம் இன்று ஒருவிதமான கவலையை அடைந்துள்ளது. துன்பமும் இன்பமும் கலந்த இவ்வுலகில் துன்பமும் இன்பமும் கலந்த ஒரு சம்பவம் எனக்கு ஏற்படப்போவதாக உணர்கிறேன். ஏதாயிருக்குமோ? கங்கையில் நீராடி மாலை தியானத்தை நடத்துவோம்.*

*(ஸீதை மூர்ச்சை நீங்கித் தெளிகிறாள்)*

ஸீதா : *ஆ லக்ஷ்மணா! ஐயோ, சொன்னபடியே சென்று விட்டாயா என்ன? ஐயோ, அந்திவேளை வருகிறது, நான் எங்கு செல்வேன்? யாரைத் துணையாக நாடுவேன்?*

*ராகம் :* **கேதாரகௌளம்**

கனவிலும் சிறிய குற்றம் கருத்தினில் நினைத்திடாத
எனையெந்தன் பிராண நாதன் இருளடர் கானகத்தில்
தனியளாய் தவிக்கும் வண்ணம் தகவலில் லாமல் விட்ட
தனிதமாம் செய்கையன்றோ ஆர்சகிப் பார்களய்யா?

வால்மீகி : *என்ன! ஏதோ அழுகைக்குரல் கேட்கின்றதே. சென்று பார்ப்போம்.*

*(ஸீதையைக் காண்கிறார்)*

*(ஸீதை எழுந்து வணங்குகிறாள்)*

*(மற்றுப்பற்றெனக்கின்றி நின் திருப்பாதமே என்ற வர்ண மெட்டு)*

*தாளம்: மிஸ்ர சாபு*

கானகந்தனில் தெய்வம் போல என்
கண் முன்வந்த மெய்ஞ் ஞானியே
கஞ்சமாமலர் பாதம் போற்றினேன்
காத்தருள் தவ தியானியே
வானவர் புகழ்ந் தேத்திடும் ஞான
வள்ளால் நுங்கழல் தஞ்சமே
மங்கை நானென்ன சொல்லுவேன் தடு
மாறுதே யெந்தன் நெஞ்சமே.

வால்மீகி: *அம்மா நீ யார்? தன்னந்தனியாக அஸ்தமன வேளையில் இந்த அடவியில் அழுது கொண்டிருக்கும் நீ யார்? உனக்கு எவ்விதமான துன்பம் நேரிட்டது?*

ஸீதா: *தெய்வமே, எவ்வாறு என் நிலைமையை உள்ளபடி இவருக்கு அறிவுறுத்துவேன்?*

வால்மீகி: *ஆம், பெண் ஒருத்தி தனது வரலாறு பரிதாப மானதாய் இருந்தால் அதை எல்லாம் வேற்றூராயிருக் கிற ஆண்களிடம் சொல்ல மாட்டாள். நாமே ஞான திருஷ்டியில் அறிந்துகொள்வது நலம்.*

*(சிறிது நேரம் கண்களை மூடித் தியானிக்கிறார்)*

*மகளே, ஸீதாதேவி! (ஸீதை திடுக்கிடுகிறாள்) ஆம், நீ ஸீதைதான். எல்லா உண்மைகளையும் ஞான திருஷ்டி யில் இப்பொழுது அறிந்துகொண்டேன். உன் தூய்மை யையும் நன்கு உணருகிறேன். கவலை நீங்குக. உன் தந்தை ஜனகனும் உன் மாமன் தசரதனும் என் நண்பர் கள். என்னைத்தான் உலகத்தவர் வால்மீகி மஹரிஷி*

என்பர். ஆதலால் நீ என் அருட் செல்வியாகிருய். தந்தையின் இல்லத்தில் மகப்பேறு [illegible] எண்ணிக்கொள். மற்றெருரு முக்கிய விஷயம். நீ யார் என்பதை நம் ஆச்ரமத்தில் யாரும் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. ஆச்ரமத்தில் மட்டுமல்ல, அயோத்தி அரசாட்சி பரவியுள்ள நாடெங்கும் நீ இப்பொழுது இங்குள்ளாய் என்பது விளங்காதிருக்கட்டும். நம் ஆச்ரமத்தில் தவம் புரிந்துவரும் பெண்களில் நீயும் ஒருத்தியாக இருந்து வருவாயாக. உன் பெயரை யாருக்கும் சொல்லாது வால்மீகி ஆச்ரமவாசி என்று மட்டும் சொல்லிக்கொள்.

ஸீதா: தந்தையே, அங்ஙனமே செய்கின்றேன். தாங்கள் இப்பொழுது இங்கு வந்து என்னை ஆதரியாதிருந்தால் என் கதி என்னவாகி இருக்கும்? குற்றமற்ற என்னை முன் எச்சரிக்கை இன்றி இப்படி வனத்தில் விட்டுச் சென்றது தர்மமாகுமா?

வால்மீகி: எது தர்மம், எது அதர்மம் என்று தெரிந்து கொள்வது மிகக் கஷ்டமானது. முனிவர்களே அவ் விஷயத்தில் மோகம் அடைகின்றனர். நீ அதை எல்லாம் எண்ணிக் கவலைப்பட வேண்டாம். ஒரு பேருண்மை உனக்கு இப்பொழுது நன்கு விளங்குகின்றதல்லவா? தூய மனமுடையவருக்கு ஒருநாளும் துன்பமில்லை. யாரும் அவர்களுக்குத் தீங்கு செய்ய முடியாது. நீ திக்கற்றவள் என்று உன்னைப்பற்றி வருந்திக்கொண்டிருந்த சிறிது நேரத்திற்குள் நல்ல துணை வந்து விட்டது பார்த்தாயா? திருவருள் என்பது இதுவே. தெய்வத்தை நம்பி கவலையற்று இரு.

ஸீதா: தந்தையே, தாம் சொல்லும் உறுதிமொழி என் உள்ளத்தில் ஞான விளக்கேற்றி வைக்கிறது. என்னைக் குறித்து எனக்கு இனிக் கவலை ஒன்றும் இல்லை. வேறு ஒரு கவலைதான் இருக்கிறது. நான் இப்பொழுது கர்ப்பவதியாக இருக்கிறேன். இந்த வேளையில் வஞ்சகமாக என்னைக் காட்டுக்கு ஓட்டியது சிசு வதைக்குச் சமானம் அல்லவா? கஷ்டம் நிறைந்த கானக வாழ்க்கை நல்ல மகப்பேறுக்கு இடைஞ்சல் ஆகும் அல்லவா? இந்த ஒரு ஐயம் என் உள்ளத்தை வாட்டுகிறது. என் செய்வேன்?

வால்மீகி: குழந்தாய், நீ இப்பொழுது அறிந்துகொள்ள வேண்டிய பேருண்மை மற்றொன்று இருக்கிறது. உன் வயிற்றில் இருக்கும் சிசுவை மேலோன் அல்லது கீழோன் ஆக்குதற்கு ஏற்ற தருணம் இதுவே. நீ இப்பொழுது அயோத்தியில் அரண்மனைவாசம் செய்தால் அது நலம் போன்று தோன்றும். ஆனால் அதில் பெரு நலம் ஒன்றும் இல்லை. கேடுதான் அதிகம் நிறைந்திருக்கிறது. அதற்கு மாறாக இங்கு ஆச்ரமவாசம் பண்ணுவது கடினமாகத் தென்படலாம். உண்மையில் எல்லா நலனும் இதில் அடங்கியிருக்கிறது. ஏன் என்று இயம்புகின்றேன் கேள். கருவில் இருக்கும் சிசுவிற்கு உன் உடலிலிருந்து நீ உணவைக் கொடுத்து போஷிப்பது முக்கியமானதல்ல. விலங்குகளும் அச்செயலை நன்கு செய்து முடித்து விடுகின்றன. நீ கர்ப்பிணியாக இருக்கும் பொழுது எண்ணுகிற எண்ணங்களே முக்கியமானவைகள். மேலான எண்ணங்களை எண்ணுவாயானால் உன் வயிற்றில் இருக்கும் குழவி மேன்மை பெறும். மேலான எண்ணத்திற்கு இந்த ஆச்ரமமே

தகுந்த சூழ்நிலை. அயோத்தி போகத்தையே நினைவுக்குக் கொண்டுவரும். ஆச்ரமம் உன்னை யோகத்தில் நிலைநிற்கச் செய்யும். அதற்கு ஏற்ற அளவு உன் சந்ததி ஞானமும், வீர்யமும், பராக்கிரமமும் நிறைந்ததாகும். இதை நீ நன்கு ஞாபகத்தில் வைத்துக் கொள்வாயாக.

ஸீதா: தந்தையே! இந்த நிமிடம் முதல் தங்கள் புதல்வியாக இருந்துகொண்டு தங்கள் உத்தரவுப்படி நடந்து கொள்வேன். இக்கானில் திக்கற்ற நிலையில் விடப்பட்ட எனக்குத் தங்களுடைய ஆதரவு கிடைத்ததிலிருந்து துன்பத்திலும் இன்பம் ஏற்படும் என உணர்கிறேன். நான் பின் தொடர்ந்து வருகின்றேன்.

(இருவரும் செல்கின்றனர்)

———

## காட்சி 3

### வால்மீகி முனிவரின் ஆச்ரமம்

(வால்மீகி ஆச்ரமத்தைச் சேர்ந்த ஆர்ஜவன் என்ற சிறுவனும், வேறு ஆச்ரமத்தைச் சேர்ந்த அவனுடைய நண்பன் ஸத்யன் என்ற சிறுவனும் உரையாடிக்கொண்டிருக்கின்றனர்.)

(ஆர்ஜவன் வேகமாக ஓடுகிருன்)

ஸத்தியன்: ஆர்ஜவா! ஆர்ஜவா!! ஏன் அப்பா, அவ்வளவு வேகமாக ஓடுகின்றனை?

ஆர்ஜவன்: ஸத்தியா மன்னிப்பாய், வேலை உளது. பேசிக் கொண்டிருக்க நேரமில்லை.

ஸத்தியன்: என்ன அவ்வளவு முக்கியமான வேலை? அது இருக்கட்டும். நீ ஏன் சில ஆண்டுகளாக எங்கள் ஆச்ரமத்திற்கே வருவதில்லை?

ஆர்ஜவன்: ஸத்தியா என் செய்வேன்! இனி நான் உன்னை முன்போல் காணமுடியாது.

ஸத்தியன்: ஏது, உனக்குக்கூட அவ்வளவு கிராக்கி வந்து விட்டது?

ஆர்ஜவன்: அப்பா, எனக்கு அவ்வழகான குழந்தைகளை விட்டு அரைநிமிடம்கூடப் பிரிந்திருக்க முடிவதில்லை.

ஸத்தியன்: உன் ஆச்ரமத்தில் குழந்தைகள் ஏது? வால்மீகிக்கு மனைவியோ உறவினரோ கிடையாதே?

ஆர்ஜவன்: ஆம், ஆனல் அவர் மகள் இங்கு வந்து குழந்தைகளைப் பெற்ருள்.

ஸத்தியன்: அவருக்கு மகளாவது மகனுவது இல்லையே?

ஆர்ஜவன்: மகள் என்ருல் பெற்றெடுத்தவள் என்றுதான் பொருளா? அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தந்தை புதல்வி போல நடந்துகொள்கின்றனர்.

ஸத்தியன்: யார் அப்பா அப்பெண்மணி?

ஆர்ஜவன்: ஆச்ரமத்தின் விதிகளை அறியாதவன்போல் கேட்கின்றாயே? தேவர்களும் முனிவர்களும் வந்து கொண்டே இருப்பர். வருபவர் யார் என்று அறிய அவாவே இருக்கக்கூடாதென்பது முனிவரின் கண்டிப் பான உத்தரவு.

ஸத்தியன்: சரி, அம்மங்கையை எவ்விதம்தான் அறிமுகப் படுத்தினார்?

ஆர்ஜவன்: 'எனக்குக் காண்பிக்கும் மதிப்பை என் மகளுக் கும் காண்பிக்கவேண்டும். இப்பெண் இந்த ஆசிர மத்தைத் தன் இல்லமாகக் கருதுமாறு நீங்கள் நடந்து கொள்ளவேண்டும்' எனக் கட்டளையிட்டார். சில மாதங் களில் அப்பெண்மணி இரு குழந்தைகளை ஈன்றாள்.

ஸத்தியன்: அப்படியானால் அவர்கள் இரட்டையர்களா, என்ன?

ஆர்ஜவன்: ஆம். குழந்தைகளுக்கு முனிவரே தந்தை செய்யவேண்டிய சடங்குகளைச் செய்தார். குசன், லவன் எனப் பெயர்களையும் இட்டார்.

ஸத்தியன்: குழந்தைகளின் வயது என்ன?

ஆர்ஜவன்: நீ சில ஆண்டுகளாக இங்கு வரவே இல்லை போல் இருக்கிறது. குழந்தைகட்கு இன்று உபநயனம் (வித்யாரம்பம்) நடைபெறப் போகிறது.

ஸத்தியன்: முனிவரே நடத்தும் ஸம்ஸ்காரத்தைப் பார்க்க வேண்டும். என்னையும் அழைத்துப் போவாயா?

ஆர்ஜவன்: நதி, ஆச்ரமம், கோயில் முதலிய இடங்கள் எல்லோருக்கும் சொந்தம். நான் ஏன் அழைக்க வேண்டும்? கூச்சமின்றி வா.

ஸத்தியன்: அப்படியா?

(செல்கின்றனர்)

# காட்சி 4

## வால்மீகியின் அறை

(வால்மீகி ஸீதாதேவியின் புதல்வர்களுக்கு உபநயனம் செய்துவைக்கின்றார். முனிவர் வீற்றிருக்கிறார். குசனும் லவனும் அருகில் பணிவுடன் நின்றுகொண்டிருக்கின்றனர்.)

குசன்—லவன்: போற்றி நின்றோம் பொற்பாதம்.

வால்மீகி: செல்வர்காள்! ஆர்ஜவனுடன் சென்று அக்னி அறையில் அக்னி சேவை செய்துவந்தீர்களா?

குசன்: ஆம், அங்கிருந்துதான் வருகிறோம்.

வால்மீகி: குழந்தைகாள்! இன்று உங்களுக்கு மிகவும் உயர்ந்த உபநயனம் (வித்யாதானம்) என்ற சம்ஸ்காரத்தைச் செய்து வைக்கப்போகிறேன். அதனால் ஏற்படும் பெருமையைப் பிறகு நீங்கள் உணர்வீர்கள். உட்காருங்கள்.

(குசனும் லவனும் அவ்விதமே உட்காருகின்றனர்)

வால்மீகி: நான் சொல்வதைச் சொல்லுங்கள்.
ஹரி: ஓம்.

குசன்: ஹரி: ஓம்.

லவன்: ஹரி: ஓம்.

(பிறகு உபநயனம் செய்வித்து காயத்ரி உபதேசம்)

வால்மீகி: சத்யம் வத.

குசன்: சத்யம் வத.

லவன்: சத்யம் வத.

வால்மீகி: *தர்மம் சர.*

குசன்: *தர்மம் சர.*

லவன்: *தர்மம் சர.*

வால்மீகி: *மாத்ரு தேவோ பவ.*

குசன்: *மாத்ரு தேவோ பவ.*

லவன்: *மாத்ரு தேவோ பவ.*

வால்மீகி: *பித்ரு தேவோ பவ.*

குசன்: *பித்ரு தேவோ பவ.*

லவன்: *பித்ரு தேவோ பவ.*

வால்மீகி: *ஆசார்ய தேவோ பவ.*

குசன்: *ஆசார்ய தேவோ பவ.*

லவன்: *ஆசார்ய தேவோ பவ.*

வால்மீகி: *அதிதி தேவோ பவ.*

குசன்: *அதிதி தேவோ பவ.*

லவன்: *அதிதி தேவோ பவ.*

வால்மீகி: *அஹம் ப்ரம்மாஸ்மி.*

குசன்: *அஹம் ப்ரம்மாஸ்மி.*

லவன்: *அஹம் ப்ரம்மாஸ்மி.*

வால்மீகி: *ஓம் சாந்தி சாந்தி சாந்தி:*

குசன்: *ஓம் சாந்தி சாந்தி சாந்தி:*

லவன்: *ஓம் சாந்தி சாந்தி சாந்தி:*

*(வால்மீகி குசன், லவன் காதுக்குள் 'ஓம் பூர்புவஸ்ஸுவ: தத் சவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி; தியோ யோ ந: ப்ரசோதயாத்' என்ற காயத்ரி மந்திரத்தை ஓதி பூணூல் அணிவிக்கிறார்.)*

வால்மீகி: *மாணவர்காள், இன்று தொடக்க நாள். ஆதலால் இத்துடன் இருக்கட்டும். இதை மற்றவருடைய உதவியினால் மனப்பாடம் செய்துகொள்ளுங்கள். பிறகு நானே பாடம் கற்பிக்கிறேன்.*

குசன்: *தாதா! மனப்பாடம் எதற்கு? மேலும் சொல்லிக் கொடுங்கள். ஒரு நாளுக்கு இந்தப் பாடம் போதாது.*

லவன்: *ஆம் ஆம், எனக்கும் அவ்விதம்தான் தோன்றுகிறது.*

வால்மீகி: *எங்கே திரும்பச் சொல்லுங்கள் பார்க்கலாம்.*

குசன்: சத்யம் வத
தர்மம் சர
மாத்ரு தேவோபவ
பித்ருதேவோ பவ
ஆசார்யதேவோ பவ
அதிதிதேவோ பவ
அஹம் ப்ரம்மாஸ்மி
ஓம் சாந்தி சாந்தி சாந்தி:

லவன்: *(ஒரு முறை குசன் சொல்லியவாறே சொல்கிறான்.)*

வால்மீகி: *(தனக்குள்) இது என்ன விந்தையாக உளது! என்னையே ஏமாற்றி விட்டனரே. பார்க்கலாம். (வெளிப்படையாக)*

*சரி, இதைச் சொல்லுங்கள் பார்க்கலாம்.*

धर्मात्मा सत्यसन्धश्च रामो दाशरथिर्यथा ।
पौरुषे चाप्रतिद्वन्द्वः रानैनं जहि रावणं ॥

தர்மாத்மா ஸத்ய ஸந்தஸ்ச
ராமோ தாசரதிர்யதா

பௌருஷே சாப்ரதி த்வந்த்வ:
ராஜனம் ஜஹி ராவணம்

(குசனும் லவனும் ஒருமுறை சொல்லுகின்றனர்)

வால்மீகி: (வியக்கிறார்.)
(தனக்குள்) நீண்ட ஆயுளும், எல்லாப் பெருமைகளும் உண்டாகட்டும். என் இராமாயணத்தை எவ்விதம் உலகில் பிரசுரம் செய்வேன் என்ற கவலை நீங்கிற்று. நானே இத்திறமையை எதிர்பார்க்கவில்லை. ஏது, என் தலைவன் இராமனையும் மீறி விடுவார்கள் போல் இருக்கிறதே! (வெளிப்படையாக) குழந்தைகாள், உங்களுக்குக் கடினமான வேலை கொடுக்கப் போகிறேன்.

லவன்: அது உங்களுக்கும் கடினமான வேலைதானே? நீங்களும் சொல்லித்தானே ஆகவேண்டும்.

வால்மீகி: (மூக்கில் விரலை வைக்கிறார்)
இருபத்து நான்கு ஆயிரம் செய்யுட்களைக் கொண்ட இராமாயணம் என்ற நூலைச் சொல்லித் தரப் போகிறேன்.

குசன்: சரி, எல்லாம் எங்கள் பாக்கியமே.

லவன்: வேதங்களை எப்பொழுது சொல்லிக்கொடுப்பீர்கள்?

குசன்: சாஸ்திரங்களை எப்பொழுது சொல்லிக் கொடுப்பீர்கள்?

லவன்: தாதா! மழை வேண்டியபோது அதை வருமாறு செய்வேன் நான்.

குசன்: தாதா! மேகங்களைக் கலைத்து மழையை நிறுத்தி விடுவேன் நான்.

வால்மீகி : குழந்தைகாள் சரி! சரி! சரி! மிகவும் சந்தோஷம். எல்லாம் சொல்லிக்கொடுத்து விடுகிறேன். மற்ற சீடர்களுக்குச் சில நாட்கள் விடுமுறை அளித்துவிடுகிறேன். (தனக்குள்) ஏது! பார்வதி தேவி, ஆசிரியர் ஹரி : ஓம் எனத் தொடங்குமுன் சாந்தி என முடித்தாள் எனக் கேட்டிருக்கிறேன். அதையும் மீறி விட்டனரே ............அது இருக்கட்டும். அஸ்திரங்கள் எவ்விதம் வந்தன. ஒருக்கால் இராமன் கருவிலேயே உபதேசம் செய்து விட்டாரு என்ன? ...........அவ்விதம் தான் இருக்கவேண்டும் ...........இவர்களின் சுறுசுறுப்பிற்கு நம் ஆஸ்ரமம் ஒன்று மட்டும் போதாது. இவர்களை வேறு பல ஆஸ்ரமங்களுக்கும் அனுப்பி வைக்கிறேன். (வெளிப்படையாக) குழந்தைகாள், புதிதாகக் கற்ற அஸ்திர வித்தையை எதிரிகளிடம் தான் பயன்படுத்த வேண்டும். வேறிடங்களில் காண்பித்து விடக்கூடாது. ஜாக்கிரதை .............. நாளை முதல் இராமாயணம் தொடங்குவோம்.

குசன்—லவன் : உத்திரவின்படி நடக்கிறோம். வணக்கம்.

(எல்லோரும் கலைகின்றனர்)

---

# காட்சி 5

## வால்மீகி ஆச்ரமம்

(வால்மீகி ஆச்ரமத்து மாணவர் குசன், லவன், ஆர்ஜவன் ஆகிய மூவரும், சுதீக்ஷ்ண முனிவரின் ஆச்ரமத்துக்குச் செல்கின்றனர்.)

லவன் : அண்ணா, இன்று எங்குச் செல்லவேண்டும்?

குசன் : தம்பி லவா! இன்று சுதீக்ஷ்ண முனிவரின் ஆச்ரமத்திற்குச் செல்லவேண்டும்.

ஆர்ஜவன் : இவர் பெயர் எங்கேயோ செவிகளில் பட்டது போல் இருக்கிறதே.

லவன் : முத்தண்ணா! உன் கவனம்தான் என்ன? அகஸ்தியரின் ஆச்ரமத்திற்குச் செல்லு முன்பு நம் தலைவரும் கதா நாயகரும் ஆகிய ஸ்ரீ ராமன் ஆங்குச் சென்றார் என்று நாம் கற்க வில்லையா?

குசன் : லவா, ஆர்ஜவனைத் தொந்தரவு படுத்தாதே. அவனுக்கு எவ்விதம் எல்லாம் நினைவில் இருக்க முடியும்?

லவன் : ஏன் இருக்க முடியாதண்ணா! உனக்கு முதலில் குரு ஒரு முறை கூறுகின்றார். பிறகு நீ சொல்வதைக் கேட்டு நான் சொல்கிறேன். அதற்குமேல் பல விடங்களில் நாம் பாடும் பொழுதெல்லாம் இவன் கேட்டுக் கொண்டுதானே இருக்கிறான்?

ஆர்ஜவன் : உன்னைப் போலவே ஏனையோரும் இருப்பர் என்ற எண்ணமோ? ஒரு செய்யுளா, இரண்டா நினைவில் வைத்துக் கொள்வதற்கு? பல்லாயிரக்கணக்கான

செய்யுட்களை எவன் நினைவில் வைத்துக்கொள்ள முடியும்?

லவன்: அது சரி ஆர்ஜவா, இராமாயணம் எத்தனை செய்யுட்களைக் கொண்டது, சொல்.

(ஆர்ஜவன் தலையைச் சொரிகிறான்)

குசன்: லவா, நல்ல கேள்வி கேட்டு விட்டாய் போ. இதுவா தெரியாது? நம் ஆச்ரமத்துப் பெண்கள் கூட இருபத்து நான்காயிரம் செய்யுட்களைக் கொண்டது எனச் சொல்லி விடுவார்களே.

லவன்: (புன் சிரிப்புடன்) அண்ணா! ஆர்ஜவனைப் பொய் சொல்லி ஏமாற்றப் பார்க்கின்றாயா? ஆர்ஜவா, குசனை நம்பி ஏமாறாதே.

ஆர்ஜவன்: குசா, நானா ஏமாறுபவன்?

குசன்: ஆனால் நீயே சொல், எத்தனை செய்யுட்களைக் கொண்டது அந்த நூல்?

ஆர்ஜவன்: (சிறிது யோசித்து) லட்சம் செய்யுட்கள்.

(இருவரும் கைகொட்டிச் சிரிக்கின்றனர். ஆர்ஜவன் வெட்கம் அடைகிறான்.)

ஆர்ஜவன்: தயவு செய்து உண்மையைச் சொல்லுங்கள். குசா, லவா, நீங்கள் இருவரும் சேர்ந்து சொல்ல வேண்டும். அப்பொழுதுதான் நான் நம்புவேன்.

குசன், லவன்: (இருவருமாக) நல்ல யுக்தி. இருபத்து நான்காயிரம் தான், அப்பா.

ஆர்ஜவன்: எனக்குத் தெரியும். லவன் விளையாட்டில் பற்றுடையவன். ஆதலால் சில சமயங்களில் பொய்

கலந்தும் பேசுவான். குசன் விளையாட்டு நேரத்தில் கூடப் பொய் பேசமாட்டான்.

**லவன் :** நானு பொய்யன், அண்ணு சொல்வது பொய் எனக் கூறட்டுமா?

**ஆர்ஜவன் :** ஆ! என்ன தைரியம்? எப்படி?

**லவன் :** இப்பொழுது நாங்கள் பாடும் இராமாயணத்தில் இருபத்து நான்காயிரம் செய்யுட்கள் உள்ளனவா, எண்ணிப்பார்.

**ஆர்ஜவன் :** அப்பா, உன்னுடன் வாதித்து எவன் வெற்றி பெறுவான்? இனி பேசாதிருந்து விடுகிறேன்.

**குசன் :** ஆர்ஜவா, பயப்படாதே. இனிச் சேர்க்கப்படப் போகும் செய்யுள்களையும் சேர்த்துத்தான் முனிவர் அக்கணக்கைச் சொல்லியிருக்கிறார்.

**ஆர்ஜவன் :** சரி! சரி!! எப்படியாகிலும் இருக்கட்டும். உங்கள் பேச்சைக் கேட்டு மகிழ்வது ஒன்றே எனக்குப் போதும். உங்களுடன் வாதாடுவதற்கு நான் ஏற்றவன் அல்ல. சரி வாருங்கள், சுதீக்ஷ்ண முனிவரிடம் செல்வோம்.

(எல்லோரும் செல்கின்றனர்.)

---

# காட்சி 6

## *சுதீக்ஷ்ண முனிவரின் ஆச்ரமம்*

*நாமாவளி*

ஸ்ரீ ராமா சீதாராமா சிருங்கார ராமா
தேவாதி தேவா ஹரே
ராமஹரே ஹரே ராமஹரே ஹரே
ராமஹரே.

குசன்: *(காதுகளில் கைகளை வைத்துக்கொண்டு)*

अभिवादये वाल्मीकीय:
कुश: नाम अहं अस्मि भो:

அபிவாதயே வால்மீகீய:
குச: நாம அஹம் அஸ்மி போ:

*(முனிவருடைய கால்களைத் தொடுகிறன்)*

சுதீக்ஷ்ணர்: *வலது கையை நீட்டி*

आयुष्मान् भव सौम्य, कुश
ஆயுஷ்மான் பவ ஸௌம்ய, குச

லவன்: *(காதுகளில் கைகளை வைத்துக்கொண்டு)*

अभिवादये वाल्मीकीय:
लव: नाम अहं अस्मि भो:

அபிவாதயே வால்மீகீய:
லவः நாம அஹம் அஸ்மி போ:

*(முனிவருடைய கால்களைத் தொடுகிறன்)*

சுதீக்ஷ்ணர்: *வலது கையை நீட்டி*

आयुष्मान् भव सौम्य, लव
ஆயுஷ்மான் பவ ஸௌம்ய, லவ

ஆர்ஜவன்: *(காதுகளில் கைகளை வைத்துக்கொண்டு)*

अभिवादये वाल्मीकीय:
आर्जव: नाम अहं अस्मि भो:

அபிவாதயே வால்மீகீய:
ஆர்ஜவ: நாம அஹம் அஸ்மி போ:

சுதீக்ஷ்ணர்: *வலது கையை நீட்டி*

आयुष्मान् भव सौम्य आर्जव
ஆயுஷ்மான் பவ ஸௌம்ய ஆர்ஜவ

*உட்காருங்கள். நீங்கள் இப்பொழுது எங்கிருந்து வருகிறீர்கள்? என்ன கற்றிருக்கின்றீர்கள்? உங்களிடம் ஏனோ எனக்குத் தனியன்பு தோன்றுகிறது!*

குசன்: *முனிவரே, நாங்கள் வால்மீகி முனிவரின் ஆச்ரம வாசிகள். முனிவரிடம் கல்வி பயின்று வருகிறோம். தங்கள் ஆசியைப் பெறுவதற்காக இங்கு வந்திருக்கிறோம்.*

சுதீக்ஷ்ணர்: *குழந்தைகாள்! ஆளுக்கு ஒரு செய்யுளைச் சொல்லுங்கள் கேட்கிறேன்*

குசன்:

तपस्वाध्यायनिरतं तपस्वी वाग्विदां वरम् ।
नारदं परिपप्रच्छ वाल्मीकिर्मुनिपुङ्गवम् ॥

தபஸ்வாத்யாய நிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம்
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முனிபுங்கவம்

லவன்:

कोऽन्वस्मिन् सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान् ।
धर्मज्ञश्च कृतज्ञश्च सत्यवाक्यो दृढव्रतः ॥

கோஅன்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே
குணவான் கஸ்ச வீர்யவான்
தர்மக்ஞஸ்ச க்ருதக்ஞஸ்ச
ஸத்யவாக்யோ த்ருடவ்ரத:

சுதீக்ஷ்ணர்: *என்ன உயர்ந்த கருத்து! இதைப் போன்ற செய்யுட்களை நான் இதுவரை கேட்டதே இல்லை. இவற்றை இயற்றிய மஹாத்மா எவர்?*

குசன்: *எங்கள் குலபதி வால்மீகி முனிவர் இயற்றி எங்களுக்குக் கற்பித்து வருகிறார்.*

சுதீக்ஷ்ணர்: *அப்படியா! அதனால்தான் அரிய கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன. அது சரி. குழந்தைகாள், நீங்கள் பாக்கியவான்கள்.*

லவன்: *ஏன் அப்படி பகர்கின்றீர்கள். ஈச்வர சிருஷ்டியில் எல்லாரும் பாக்கியவான்கள்தானே?*

சுதீக்ஷ்ணர்: *சிறுவர்காள்! ஆச்ரம வாசிகளுக்கும் மற்ற லௌகீக வாழ்க்கையில் இருக்கின்றவர்களுக்கும் பெரிய வேற்றுமை உண்டு. ஒரு வேளை உலகத்தவர்களை நீங்கள் பார்த்திருக்கமாட்டீர்கள்.*

குசன்: *அந்த வேற்றுமையைத் தாங்கள் எங்களுக்குக் கொஞ்சம் எடுத்து ஓதுவது முறையாகுமானால் அங்ஙனம் செய்யும்படி பணிவுடன் வேண்டிக்கொள்கிறோம்.*

சுதீக்ஷ்ணர்: *(புன்சிரிப்புடன்) மிக நன்று. சிறிது சொல்கிறேன் கேளுங்கள். உங்கள் முகவிலாசத்தில் பிரம்ம*

தேஜஸ் வீசுகிறது. உலகத்தில் இருக்கிற சிறுவர் களிடத்து இந்தச் சிறப்பைக் காண முடியாது.

லவன்: அதற்குக் காரணம் யாதோ?

சுதீக்ஷ்ணர்: வாழ்க்கை முறையிலுள்ள வித்தியாசமே அதற்குக் காரணம் ஆகும். நீங்கள் அதிகாலையில் எழுந்திருக்கிறீர்கள். கங்கையில் நீராடி, சூரியோ தயத்தை எதிர்பார்த்து நிற்கின்றீர்கள். உதிக்கும் சூரியனுடைய கதிர்கள் உங்கள் தேகத்தில் படுவதால் அது பிரகாசம் பெறுகிறது. மற்றவர்கள் பொழுது புலர்ந்து நெடுநேரத்திற்குப் பிறகும் உறங்கிக்கொண் டிருப்பார்கள். ஆதலால் அவர்கள் முகத்தில் சோம்ப லும் தமோகுண இருளும் குடிகொண்டிருக்கும்.

குசன்: அத்தகைய மனிதர்களும் உலகில் உண்டோ?

சுதீக்ஷ்ணர்: பெரும்பாலோர் அத்தகையவர்கள்தான். மேலும் கேளுங்கள். நீங்கள் பகவத் சிந்தை கொள்கின்றீர்கள். உங்கள் உள்ளம் தெளிவடைகின்றது. அவர்கள் உலக விஷயங்களையே நினைக்கின்றார்கள். மனது மாசுபடு கின்றது.

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்

என்னும் மறைமொழி அவர்களுக்கு வெறும் ஏட்டுக் கல்வியாய் முடிந்து விடுகிறது. நீங்களோ அக்கோட் பாட்டுக்கு ஏற்ற பெருவாழ்வு வாழ்கின்றீர்கள்.

லவன்: என்ன விந்தை! கடவுள் வணக்கம் பண்ணாத மனிதர்களும் உலகில் உண்டா?

சுதீக்ஷ்ணர்: ஆம் பிள்ளாய்! இன்னொரு பெரிய வித்தியாசம் உங்களுக்கும் அவர்களுக்கும் இடையில் இருப்பதைப் பகர்கிறேன் கேளுங்கள். ஆச்ரமத்தில் வசிக்கும் நீங்கள் இயற்கைத் தாயின் மெய்ப்புதல்வர்கள் ஆவீர்கள். மரம், செடி, கொடி, ஊர்வன, நடப்பன ஆகிய எல்லா உயிர்களோடும் நீங்கள் நல்லிணக்கம் கொள்கிறீர்கள். ஊர்களில் வசிக்கும் அவர்களோ ஒருவரை ஒருவர் தாக்கவும், ஒருவர்மீது ஒருவர் பொறாமைகொள்ளவும், ஒருவரை ஒருவர் வெறுக்கவும், ஒருவரை ஒருவர் பகைக்கவும், ஒருவரை ஒருவர் ஏமாற்றவும்—இப்படியெல்லாம் செய்து தங்களிடத்து இயல்பாய் உள்ள தெய்வத்தன்மையை எல்லாம் இழந்து விடுகிறார்கள். யார் உள்ளத்தில் சினமும், அச்சமும், பகையும், நாணமும், வீண் ஆடம்பரமும் குடிகொள்கின்றனவோ அவர்கள் கயவர் ஆகின்றார்கள். உலகில் கயவர் கூட்டம்தான் அதிகம்.

குசன்: வீண் ஆடம்பரம் என்றீர்களே, அது எனக்கு விளங்கவில்லை.

சுதீக்ஷ்ணர்: ஆம், மாசு இல்லா மனமுடைய உனக்கு அது விளங்காததில் ஆச்சர்யம் ஒன்றும் இல்லை. அதை விளக்குகிறேன் கேளுங்கள். நீங்கள் உடலை இயற்கையாய் உள்ளபடி விட்டுவிடுகின்றீர்கள். உள்ளத்தைப் பண்படுத்துவது உங்கள்செயல். அடக்கம், பணிவிடை, அன்பு, மரியாதை, இன்சொல், விடாமுயற்சி முதலிய மனதுக்குரிய சீரிய செயல்கள் மனதைப் பண்படுத்துகின்றன. இதற்கு மாறாக உலக மக்கள் உள்ளத்தில் பேராசையும், காமமும், குரோதமும், வஞ்சகமும் போன்ற துச்ச எண்ணங்கள் குடி இருக்க இடம்

கொடுத்துவிட்டு உடலை அலங்கரிப்பதிலேயே கண்ணும் கருத்துமாய் இருக்கிருர்கள். அலங்காரமான ஆடை அணிந்துகொள்ளுதல், ஆபரணங்களைப் போட்டுக்கொள்ளுதல், வாசனைத் திரவியங்களைப் பூசிக்கொள்ளுதல் ஆகிய இச்செயல்கள்தான் வீண் ஆடம்பரம் என்று பெயர் பெறுகின்றன.

**லவன்:** தபோதனரே, போதும். இத்தகைய கயவர் உலகம் ஒன்று இருக்கிறதென்று இதுவரையில் நாங்கள் கேள்விப்படவில்லை. அதில் நாங்கள் அகப்படாதிருத்தல் பொருட்டு தாங்கள் எங்களை மனமார ஆசீர்வதிப்பீர்களாக. விடை தாருங்கள், போய்வருகிரேம்.

**சுதீக்ஷ்ணர்:** நல்லது போய்வாருங்கள். விரும்பியவாறே நீங்கள் தெய்வத்துக்குரிய குழந்தைகளாக இருங்கள்.



## காட்சி 7

### ராமர் அரண்மனை

(அயோத்தியில் அச்வமேதயாகத்திற்கு ஏற்பாடு நடக்கிறது. ராமர் லக்ஷ்மணனுடன் சம்பாஷிக்கிருர்.)

ராமன்: லக்ஷ்மணு, நம் ஆட்சி இப்பொழுது ஒழுங்காக நடைபெற்று வருகிறது. மக்கள் யாரும் நம் பரிபாலனத்தில் பிழை கண்டுபிடிக்க முடியாது. அத்தகைய ஆட்சியின் முடியாக அச்வமேத யக்ஞம் ஒன்று நிகழ வேண்டும். நன்கு வளர்கின்ற விருக்ஷம் சுவை நிறைந்த கனிகளைப் பொது நன்மைக்கு விளைவிப்பதுபோன்று நம் ராஜ்யத்தில் அச்வமேத யக்ஞத்தின் வாயிலாக சமூகம் முழுதுக்கும் நலன் ஏற்படவேண்டும். செல்வம் அடைபட்டுக்கிடக்கிற இடங்களிலிருந்து அது திரட்டி எடுக்கப்படுகிறது. தேவையானவர்களுக்கெல்லாம் அது முறையாக வழங்கப் பெறுகிறது. கற்றவருடைய கல்வி எல்லார்க்கும் உரியது ஆக்கப்படுகிறது. மேலோருடைய மேன்மை சமூகம் முழுதிலும் பரப்பப் பெறுகிறது. இத்தனை நலங்களும் அதினின்று சமூகத்திற்கு வருகிறது. ஆக, அதற்குவேண்டிய ஏற்பாட்டை விரைவில் செய்வாயாக.

லக்ஷ்மணன்: தங்கள் ஆக்ஞைப்படி செய்து அமைக்கிறேன் அண்ணு. முதலில் ஆகவேண்டிய ஏற்பாடு வீர்யம் நிறைந்த அச்வம் ஒன்றை நாடெங்கும் சுற்றித் திரிந்து வரும்படி அவிழ்த்துவிடுவது ஆகும். அதைப் பிடித்துக் கட்டுபவன் நம் எதிரி. மரியாதையுடன் அதைப் பாரட்டுபவர்கள் நம் செங்கோலுக்கு உட்பட்டவர்கள் ஆவார்கள். இதோ என் மைந்தன்

சந்திரகேது இருக்கின்றான். வீரியத்தில் இவன் முற்றிலும் நம் போன்றவன். நம் இக்ஷ்வாகு குல வம்சத்திற்கு ஏற்ப அஸ்திர, சஸ்திர வித்தைகளை எல்லாம் நன்கு அறிந்திருக்கிறான். தக்க காலாட்களுடன் இவன் குதிரையை எல்லா தேசங்களிலும் ஓட்டி வெற்றி வீரனைத் திருப்பிக்கொண்டு வந்து சேர்ப்பான்.

ராமன்: ஆம் இளையோய்! அது முற்றிலும் சரி. அவ்வரிய செயலைச்செய்வதற்கு ஏற்ற இளம் சிங்கம் இவன். அத்துடன் முனிவர்கள் அனைவர்க்கும் அச்வமேத யக்ஞத்திற்கு எழுந்தருளும்படி அழைப்பு அனுப்புவாயாக.

லக்ஷ்மணன்: அங்ஙனமே செய்கிறேன் அண்ணா.

# காட்சி 8

## குசன் லவன் குதிரையைப் பிடிப்பது

(ஆச்ரமத்துக்கு அருகில் உள்ள காட்டிற்கு யாகத்திற் குரிய குதிரை வருகிறது. முதலில் ஆர்ஜவன் குதிரையைப் பார்க்கிருன்.)

ஆர்ஜவன்: (பரபரப்புடன் ஓடிவருகிருன்) லவா! குசா! ஓடிவாருங்கள், விந்தை! அதிசயம்!

லவன்: (மெதுவாக) வருகிறேன். ஆர்ஜவா, என்ன விந்தையைக் கண்டுவிட்டாயப்பா? நீ ஓடி வருவது தான் எனக்கு விந்தையாய் இருக்கிறது.

ஆச்சரியத்துடன் ஆர்ஜவன் பாடுகிருன்.

(கலை முதலான தொழில் முறையாவும் என்ற மெட்டு)

தாளம்—ஆதி

ஆஹா நமது ஆச்ரமம் அருகே
அதிசய மிருகம் வருகுது பார்
ஓஹோ இதுவரை நான் கண்டதில்லை
ஓடியென் பக்கம் வந்து நீசேர்.

நீட்டமாயிருக்குதே வாலு—மிக
நேர்த்திய தாகிய காலு
வாட்டமாய் உடல்நிறம் பாலு—ஆசை
வளருதே இதனைப்பார்க்க மென்மேலும்

கழுத்திலும் காலிலும் மணிகளை நிறையக்
கட்டியே காட்டில் விட்டது யார்?
முழுப்பிறைபோல பளபளப் பாயதன்
முகத்தில் தொங்குதே அதுவென்ன கூறு.

பிடித்து வளர்த்திட ஆசை—ஆனால்
பிடிப்பதென்றால் பிரயாசை—அது
நடக்கையில் தாளத்தி னோசை
நமக்கேன் தோணுது இந்தப்பேராசை

அதிசயமான மிருகத்தைப் பார்க்க
அண்ணனும் குசன் அவன் எங்கே
இதுசமயம் பார்த்தா அவன் சென்றான்
இம்மிருகம் நிற்குமோ இங்கே?

அதுபோய் விடிலென்ன செய்கிறது
உன் அண்ணன் எப்படிப் பார்க்கிறது
மெதுவாக அது நடக்கிறது
சென்று வீரத்துடன் யார் பிடிக்கிறது?

ஆர்ஜவன்: *பார்த்த பிறகு நீயும் நான் சொல்வது சரி என்று கூறுவாய். குசன் எங்கே?*

லவன்: *என்னிடமே சொல். தமையன் வெளியில் சென்றிருக்கிறான்.*

ஆர்ஜவன்: *ஒரு புதிய மிருகம் வந்திருக்கிறது.*

லவன்: *அப்படியா! நாம் பார்க்காத மிருகமா அது? வா, சென்று பார்ப்போம்.*

*(இருவரும் சென்று பார்க்கின்றனர்)*

லவன்: *ஆர்ஜவா, என்ன கம்பீரமான மிருகம் இது! பார்த்தனையா! பசுப்போன்றிருக்கிறது, ஆனால் இதன் தலையில் கொம்புகள் இல்லையே. எவ்வளவு லக்ஷணமான மிருகம் இது!*

ஆர்ஜவன்: *இன்னொரு விந்தையைப் பார்! கால் குளம்புகளில் பிளவு இல்லை. வாலிலும் கழுத்துப் பட்டை*

யிலும் எவ்வளவு அடர்த்தியான மினுமினுப்பான நீண்ட கேசங்கள் இருக்கின்றன பார்.

லவன்: ஆர்ஜவா! இம்மிருகத்தை நாம் விளையாட்டிற்குப் பிடித்து வைத்துக்கொள்ளலாம். புதிய மிருகமாக இருக்கிறதல்லவா?

ஆர்ஜவன்: அப்பா! இதை அடக்கி விளையாட நம்மால் முடியுமா? எண்ணிப்பார்.

லவன்: என்ன அசடாக இருக்கின்றாய்? நம்மைப் போன்ற மனிதர்கள்தானே இதைப் பழக்கிவருகின்றனர். நாம் மாத்திரம் ஏன் இதைக்கட்ட அஞ்சவேண்டும்? உன்னால் முடியாவிட்டால் நான் பிடித்துக் கட்டிவிடுகிறேன்.

(லவன் குதிரையைப் பிடித்துக் கட்டுகிறான். வேலையாள் வேகமாக வருகிறான்.)

வேலையாள்: எங்கே குதிரையைக் காணோமே, சந்திரகேது சினங்கொள்வாரே, என் செய்வேன்?

(ஆர்ஜவனைப் பார்த்து)

அப்பா, எங்காவது குதிரையைப் பார்த்தாயா? சொல்.

ஆர்ஜவன்: (வேலையாளைப் பார்த்துப் பதற்றத்துடன்) குதிரையா! குதிரையா! (கைகளைப் பிசைந்துகொண்டு) குதிரையா!

வேலையாள்: (சினத்துடன்) உண்மையைச் சொல்வாயா, மாட்டாயா?

லவன்: ஆர்ஜவா? ஏன் இப்படி நடுங்குகிறாய்? அவன் என்ன செய்துவிட்டான்? நீ பேசாது இரு. நான் பார்த்துக் கொள்கிறேன்.

(வேலையாளைப் பார்த்து)

என்ன விரட்டுகிறாய்? குதிரையோ வேறு மிருகமோ அதைப்பற்றி என்ன கவலை? காட்டில் திரியும் மிருகத்தினிடம் எல்லோருக்கும் உரிமையுண்டு. அதில் நீ மாத்திரம் உரிமை கொண்டாடுவது ஏன்? எங்களுக்கு அது புதிது. அதனோடு விளையாட ஆவல் ஏற்பட்டது. பிடித்துக் கட்டினோம். இதற்கு என்ன இவ்வளவு அதட்டல்?

வேலையாள்: இது காட்டில் திரியும் மிருகம் அல்ல, அப்பா. நாங்கள் இதை ஓட்டி வருகிறோம். இதை எவரும் பிடித்துக் கட்டக்கூடாது.

லவன்: அப்படியானால் நீ மிருகத்துடன் கூடவே இருக்க வேண்டும். கயிற்றால் கட்டிப் பிடித்திருக்க வேண்டும். தனியாக அதைத் திரியவிட்டால் அதை எவர் வேண்டுமானாலும் பிடித்துக் கட்டி விடுவர். காட்டின் சுதந்திர வாழ்க்கையை நீ அறியாய் போலும்.

வேலையாள்: பையா, உன்னுடன் அதிகப் பேச்சு எதற்கு? இதோ என் எஜமானன் வந்து விட்டார். உனக்கு நல்ல சூடு கிடைக்கும்.

(சந்திரகேது வருகிறான்)

சந்திரகேது: என்ன கூச்சல்? ஏன் வீணை முனிபாலர்களுடன் வழக்கிடுகிறாய்? அவர்கள் நம்மைச் சினந்து கொள்வர்.

வேலையாள்: இல்லை இளவரசே, குதிரையைக் கட்டிவிட்டு இவன் நம்மை வம்புச் சண்டைக்கு இழுக்கிறான்.

சந்திரகேது: என்னடா உளறுகிறாய்! குதிரையைக் கட்டும் ஆற்றல் முனிபாலர்களுக்கு ஏது? ஏதோ

வாய்ப்பேச்சில் வீரராயிருப்பர் அவர். அதைக் கேட்டு நடுங்கி விட்டாயா என்ன?

வேலையாள் : இல்லை எஜமான்! உண்மையாகவே நம் குதிரையைக் கட்டிவிட்டான் இப்பையன்.

சந்திரகேது : உண்மையா! (லவனைப் பார்த்துத் தனக்குள்) என்ன பிரம்ம களை சொட்டுகிறது! எவ்வளவு அழகிய வடிவம்! மனம் இவன்பால் ஏனோ அன்பு கொள்கிறது. (வெளிப்படையாக) ஏன் பையா! துணிவுடன் குதிரையைப் பிடித்துக் கட்டினையா?

லவன் : (சந்திரகேதுவைப் பார்த்து) (தனக்குள்) என்ன ஒளி வீசும் முகம்! என்ன இனிய குரல்! இவனுடன் வாதாடுவதற்குக்கூட மனம் வருவதில்லை. இருக்கட்டும். (வெளிப்படையாக) ஆம் ஆம், ஏதோ ஒரு புதிய மிருகம் வந்தது. என் நண்பன் பார்த்தான். ஆச்சர்யம் அடைந்தான். அவன் மகிழ்ச்சிக்காக நான் அதைப் பிடித்துக் கட்டினேன். என் அண்ணன் குசன் வெளியில் சென்றிருக்கிறான். அவனும் இந்த நூதன மிருகத்தைப் பார்க்கட்டும் என்ற அவா உண்டு. அதற்காகக் கட்டி வைத்திருக்கிறேன். எப்பொருளிலும் ஆச்ரம வாசிகளாகிய எங்களுக்கு விருப்பம் கிடையாது. எவ்வுயிர்க்கும் சிறை கிடையாது. சிறிது நேரத்தில் குசன் வருவான். அவன் பார்த்ததும் இதை விருப்பப்படி திரியுமாறு அவிழ்த்து விடுவேன். பிறகு நீ வேண்டுமானால் எங்கோ ஓட்டிச் செல்.

சந்திரகேது : ஏது! உன் தயவிற்கு நான் காத்துக்கொண்டு இருக்கவேண்டும் போல் இருக்கிறதே! முனிவரின் தவத்திற்கு மதிப்பளித்து நடந்து கொண்டால் நீங்கள்

வரம்பு மீறிப் போகின்றீரே! ஆச்ரமமாக இவ்விடம் இல்லாமல், நீயும் முனிபாலனுக இல்லாதிருப்பின் நிலைமை வேறு விதமாக இருந்திருக்கும்.

லவன்: (அலட்சியப் பார்வையுடன்) ஏன் வீணுகப் பேசிக் கொண்டே போகின்ருய். இத்துடன் பேச்சை நிறுத்திக்கொள். உனக்கு வேண்டியது என்ன? குதிரை என்று சொல்கின்ருயே அந்த மிருகம் தானே! அவ் வேலையைப் பார்த்துக் கொள்ளாது எங்கள் தவத்திற்கும் ஆச்ரமத்துக்கும் நீ மதிப்புக் கொடுக்க வேண்டாம். நீ முடியுமானதைச் செய்துகொள்.

சந்திரகேது: செய்து கொள்ளட்டுமா! அப்படிச் சொல். நல்ல காலத்தின் பயனுகத் தண்டனை பெருமல் தப்பித்துக்கொண்டாய். இந்தப் பிதற்றுதல் இல்லாமல் முதலிலேயே பணிவுடன் இதைச் சொல்லி இருந்தால் மிகவும் நன்ருய் இருந்திருக்கும் அல்லவா?

லவன்: முடிந்ததைச் செய்துகொள் என்றுதான் சொன்னேன். செய்துவிட்டுப் பிறகல்லவோ பேசவேண்டும்? முதலில் செய்துபார்.

சந்திரகேது: இதோ பார் (வேலையாளைப் பார்த்து) ஏ! விரைவில் சென்று குதிரையை அவிழ்த்து ஓட்டிவா, நேரமாகிறது, செல்.

லவன்: என்ன சாமர்த்தியம்! அதிலும் நீ தப்பித்துக் கொண்டாய் போலும். வேலையாளுக்குத் திறமை இருந்தால் போய் அவிழ்த்து விடட்டும். முதலிலேயே சொல்லி விட்டேன்.

(வேலையாள் விரைவில் செல்கிருன்)

(லவன் கண்களை மூடி ஏதோ ஜபம் செய்கிருன். வேலையாள் தடைபெற்று நின்று விடுகிருன்.)

வேலையாள்: ஐயோ, ராஜ குமாரா! இடத்தைவிட்டு நகரமுடியாமற் போயிற்றே! கை கால்களை அசைக்கவே முடியவில்லையே? நான் என்ன செய்வேன்? குதிரையை விடுவிக்கப் 'போவதிருக்கட்டும். என்னை இந்த மாயக் கட்டிலிருந்து அவிழ்த்து விடு.

சந்திரகேது: இதென்ன விந்தை! நாம் எண்ணியபடி இவன் சாமான்ய முனிப் பையன்களைப் போல் தோன்ற வில்லையே. எவ்விதம் கட்டியிருப்பான்? தவத்திஞல் இருக்குமோ? அதற்கு வேண்டிய தவத்தைச் செய்ய வயதெங்கே? அஸ்திரங்களாகத்தான் இருக்கவேண்டும். எவ்விதம் அஸ்திர வித்தை கற்றிருப்பான்?

(லவனைப் பார்த்து)

முனிப்பையா! உன் திறமையை மெச்சுகிறேன். இந்த வித்தையை எவ்விதம் கற்றனை? எங்குக் கற்றனை?

லவன்: கெஞ்சிஞல் மிஞ்சுதல். மிஞ்சிஞல் கெஞ்சுதல். இதுவே உங்கள் தொழில். முடியாவிடில் கெஞ்ச ஆரம்பித்து விடுவதோ?

சந்திரகேது: (சிறிது சினத்துடன்) ஆ, கெஞ்சுதலைக் கிஞ்சிற்றும் அறியாதவர் நாம் என்பதை இவன் அறி யான். இதோபார் வேலையாளை இப்பொழுதே விடுவிக் கிறேன் பார்.

(கண்களை மூடிக்கொண்டு ஜபம் செய்கிருன். வேலையாள் விடுபட்டு மகிழ்ச்சியுடன் தன் தலைவனிடம் ஓடி வருகிருன்.)

லவன் : (மூக்கின்மீது கையை வைத்து) நீயும் வீரனுகவே தோன்றுகின்ருய். என் அண்ணனும் உன்னைப் பார்த்தால் மகிழ்வான். அவன் வரக்காணேனே!

(குசன் விரைவில் வருகிருன்)

சந்திரகேது : ஓகோ, உன் ஒரு வித்தை எங்கேயோ கற்ற வித்தை. நாகாஸ்திர வித்தை பலியாது போய்விட்டவுடன் நடுக்கம் வந்து விட்டதல்லவா? துணைக்கு அண்ணனைத் தேடுகிருய் போலும், என்ன வீரம்! (சிரிக்கிருன்.)

குசன் : லவா இரு, என்ன இது, விஷயத்தைச் சொல்.

லவன் : அண்ணு, சற்று இரு. இவனுக்குப் பதில் அளித்துவிட்டு வந்துவிடுகிறேன். வீரா, கருடாஸ்திரத்தைப் பிரயோகித்து வேலையாளை விடுவித்து விட்டதற்கா இவ்வளவு தடபுடல்?

சந்திரகேது : அப்படியானல் கருடாஸ்திரமும் உனக்குத் தெரியும் போல் இருக்கிறதே!

குசன் : லவா, ஏன் வீண்வாதம்? (சந்திரகேதுவை நோக்கி) வீரா, நாங்கள் தற்பாதுகாப்பிற்காகத்தான் அஸ்திரங்களைப் பயன்படுத்துவோம். ஆக்கிரமித்து ஒருவர் மீதும் நாங்கள் சண்டைக்குப் போக மாட்டோம். ஆதலால் எங்களுக்கு எந்தெந்த அஸ்திரங்கள் தெரியும் என்று செயலிலிருந்துதான் நீ அறிந்துகொள்ள முடியும்.

சந்திரகேது: (தனக்குள்) இவர்கள் திறமைதான் என்ன என்று நாம் முழுதும் அறிந்தாகவேண்டும். மேலும் குதிரையைப் பெறவேண்டுமே? பார்க்கலாம். தவ வீரர்காள்! இதோ பாருங்கள்.

(கண்களை மூடி ஜபிக்கிறான். காடு பற்றி எரிகிறது.)

குசன்: ஓ அக்னி அஸ்திரத்தை உபயோகித்தாயா? சரி.

(கண்களை மூடி ஜபிக்கிறான். மழை பெய்கிறது. தீ அணைகிறது.)

சந்திரகேது: என்ன, வருணாஸ்திரத்தால் தீயை அணைத்து விட்டாய். இதற்கென்ன சொல்கிறாய் பார்க்கலாம்.

(கண்களை மூடி பிரம்மாஸ்திரத்தை ஏவுகிறான்)

குசன்: என்ன வீரம் அப்பா! பிரம்மாஸ்திரத்தை, கடைசியாக உபயோகிக்கும் அஸ்திரத்தை ஏவி விட்டாய் போலும். நாங்களா இதற்கு அஞ்சுபவர்? இதோ பார்.

(கண்களை மூடி ஜபிக்கிறான். உலகம் இருளினின்று நீங்கி ஒளி பெறுகிறது.)

சந்திரகேது: என்ன, நாராயண அஸ்திரத்தை ஏவி பிரம்மாஸ்திரத்தையும் தடை செய்துவிட்டானே! இனி என்ன செய்வது? இதற்கு மேற்பட்ட அஸ்திரம் ஒன்றும் இல்லையே. இவ்வஸ்திரங்கள் வேறு எவர்க்கும் தெரியாதவை என்று பெரிய தந்தை ஸ்ரீராமபிரான் சொல்லியதை நம்பி அல்லவா ஏமாற்றம் அடைந்தேன்? இனி என் செய்வேன்? எவ்வாறு வெல்வேன்? கெஞ்சிக்கேட்டுக் குதிரையைப் பெறுவது இழிவாயிற்றே!

(தலை குனிந்து நிற்கிறான்)

குசன்: (பெருந்தன்மையுடன்) அப்பா, வீரச்சிறுவா, ஏன் கலங்குகின்றனை? அஸ்திரங்கள் எல்லாவற்றையும் சிதறுமாறு செய்துவிட்டோமே என்றா கலக்கம்? உன் வீரத்தை மெச்சினோம். எங்களுக்கு உன்னை வென்றதனால் ஒரு பெருமையும் ஏற்பட வேண்டியதில்லை. நீயே வீரனெனக் கொள்ளலாம். சென்று வா.

சந்திரகேது: (*தனக்குள்*) என்ன பெருந்தன்மை, என்ன தன்னடக்கம், என்ன அச்சமின்மை! குதிரையில்லாமல் எப்படிப் போவது? குதிரை வேண்டும் என எப்படிக் கேட்பது?

(*மறுபடியும் தலை குனிந்து நிற்கிறான்*)

லவன்: அண்ணா அண்ணா, பாபம் குதிரைக்காகத் தயங்குகிறான் நண்பன். (*சந்திரகேதுவை நோக்கி*) வீரா, உன் குதிரையை நீ ஓட்டிச் செல்வதில் எமக்கு ஓர் ஆட்சேபமும் இல்லை. இதோ நானே அவிழ்த்துவிடுகிறேன்.

(*சந்திரகேது மறுபடியும் தயக்கத்துடன் நிற்கிறான்*)

குசன்: அப்பா, உன் தயக்கத்தின் பொருளை உணர்ந்தேன். உனக்கோ உன் வீரத்திற்கோ எவ்வித இழுக்கும் இல்லை. தற்காப்பிற்காகவே நாங்கள் உன் அஸ்திரங்களைத் தடுத்தோமே அன்றி உன்னை வெல்லுவதற்காக அல்ல. ஆதலால் நீ தோற்றவன் ஆகமாட்டாய். நாங்களும் வென்றவர் ஆகமாட்டோம். எங்களது நட்பைப் பெற்றுள்ளாய் என்ற ஊக்கத்துடன் செல்.

சந்திரகேது: என்ன உயர்வு, என்ன பெருந்தன்மை! நண்பர்காள், உங்களைப் பிரியவே மனம் வரவில்லையே? நான் என்ன செய்வேன்?

குசன்: நாங்களும் அவ்விதமே உணர்கிறோம். நமக்கிடையில் ஏதோ தொடர்பிருக்கிறது. மறுபடியும் நாம் சந்திக்க நேரிடுமென்று எங்களுக்குத் தோன்றுகிறது. சென்றுவா.

எல்லோரும் கலைகின்றனர்.

---

## காட்சி 9

### வால்மீகி ஆச்ரமம்

*(ஸீதையுடன் வால்மீகி சம்பாஷணை)*

வால்மீகி: குழந்தாய், நீ குதூகலத்துடன் இருக்கின்றாயா? உனது ஆத்ம சாதனம் எங்ஙனம் நடைபெற்று வருகின்றது?

ஸீதா: தந்தையே, தங்கள் அருளால் எனக்கு ஒரு குறையும் இல்லை. தவ நெறியினின்றும் நான் அடையும் ஆனந்தம் அளவற்றது. தாங்கள் இயற்றியுள்ள ராமாயணம் எனக்குப் புதியதோர் உயிரைக் கொடுக்கிறது. எனக்குப் புறம்பாகவும் என் கணவனாகவும் இருந்த இராமன் இப்பொழுது எனக்கு ஆத்ம ராமன் ஆய்விட்டான். என் மனத்தகத்து அவன் மாறாது மிளிர்கின்றான். புறத்தே குச லவ வடிவங்களாக ஒளிர்கின்றான்.

வால்மீகி: முற்றிலும் சரி, உன் பிள்ளைகள் இருவரும் உன்னை இன்னார் என்று தெரிந்து கொண்டார்களா? எப்பொழுதாவது வாத்ஸல்ய பாவனையில் அவ்வுண்மையை நீ அவர்களுக்கு வெளியிட்டதுண்டா?

ஸீதா: அருட்பேறே! தங்கள் உத்தரவுப்படி நான் அதை அடியோடு மறைத்து வைத்திருக்கிறேன். அவர்களுக்கு நான் தாய் என்பதுமட்டும் தெரியும். ஆனால் நான்தான் ஸீதை என்றும் இரகுபதி அவர்களுடைய தந்தை என்றும் அவர்களுக்குத் தெரியாது. இராமாயணத்தை அவர்கள் பாடும்பொழுது நான் இராமானந்தம் அடைகிறேன். ஸீதையை அவர்கள் சிலாகித்துச் சொல்லும்

*பொழுது அதுவும் இராமனுடைய மகிமை என்று நான் மௌனமுற்றிருக்கிறேன்.*

*ராகம் — பியாக்* *தாளம் — ஆதி*

மாதவ மாமுனியே எந்தனைப் பெற்ற
மாதாபிதா நீரினியே
ஆதரித்தருள் செய்தீர் என்பதில் ஏதும்ஐயமில்லை
ஆயினும் அடியாளின் உள்ளத்தில் ஓர் கவலை

*நம் குழந்தைகள் இருவரும் வெளியில் சென்று நெடு நாள் ஆயிற்றே, ஏன் அவர்கள் இன்னும் திரும்பி வர வில்லை?*

வால்மீகி: *அவர்கள் ஆச்ரமம்தோறும் சென்று நாம் இயற்றிய இராமாயணத்தைப் பாடிப் பிரகடனம் பண்ணி வருகின்றனர். மற்றொரு செய்தி. அயோத்தியில் இராமன் அச்வமேத யக்ஞம் செய்யப் போகிறான். முனிவர்கள் பலர் அங்கு அழைக்கப்பட்டிருக்கின்றனர். நாம் இயற்றிய இந்த இராமாயணத்தை உனது தவப் புதல்வர்கள் வாயிலாக அரங்கேற்றி வைப்பதற்கு முனிவர்கள் யாராவது அச்சிறுவர்களை அங்கு அழைத்துச் செல்வது திண்ணம்.*

ஸீதா: *ஐயோ வேண்டாம், அவர்கள் அங்குச் செல்ல வேண்டாம். ஒரு வேளை அது விபரீதமாக ஆய்விட லாம்.*

வால்மீகி: *குழந்தாய், அக்கவலை உனக்கு வேண்டாம். அது மட்டுமல்ல, தவக்கோலத்தில் இருக்கும் உன்னை யும் இன்னார் என்று காட்டாது அங்கு அழைத்துச் செல்லலாம் என்று தீர்மானித்திருக்கிறேன்.*

ஸீதா: தேவே, வேண்டாம் வேண்டாம். நான் ஒருத்தி அடைந்த சிறுமை போதும். என்னை முன்னிட்டு அவர்கள் இராமனுடைய குழந்தைகள் அல்லர் என்று புறக்கணிக்கப்படுவார்களானால் அந்த அவமானத்தை, அடாத குற்றத்தை, நான் ஒரு நாளும் சகியேன். அதை முன்னிட்டு என் உள்ளத்தில் பொங்கும் சீற்றம் உலகுக்கே கேடாய் முடிந்துவிடும்.

வால்மீகி: எல்லாம் மங்களமாய் முடியும்; கவலையற்று என் பின் வருக.

---

## காட்சி 10

### அச்வமேத யக்ஞம்: ஸீதை பூமியினுள் பிரவேசித்தல்

(அயோத்தியில் அச்வமேத யக்ஞத்தின் நிகழ்ச்சி. அதைப்பற்றி ராமனுக்கும் வசிஷ்டருக்கும் இடையில் பேச்சு)

ராமன்: (வசிஷ்டரை நோக்கி) முனிவரே, நம் குதிரை நாடு முழுவதும் சுற்றித் திரும்பி விட்டதெனச் சொல்கின்றனர். ஆதலால் தங்களை அழைத்துவரச் சொன்னேன். யாகத்தை முறைப்படி நடத்த வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

வசிஷ்டர்: ராமா! உன் அவாவைக் குறித்து மிகவும் மெச்சுகிறேன். அஸ்வமேதம் கட்டாயம் செய்யவேண்டியதுதான். ஆனால் உன் மனம் வருத்தமடையக் கூடிய ஒரு செய்தியைக் குறித்துப் பேசவேண்டியிருக்கிறது.

ராமன்: முனி சிரேஷ்டா, இந்தக் கர்ம பூமியில் மனிதனைகப் பிறவியெடுத்ததே பொறுமையுடன் துக்கத்தை அனுபவிப்பதற்காக அன்றோ! அதற்காகக் கலங்குபவன் அரசனாக இருக்க முடியுமா?

வசிஷ்டர்: உன்னால் எல்லாவற்றையும் நிறைவேற்ற முடியுமப்பா, ஐயமில்லை. ஆனாலும் இது.........

ராமன்: ஸ்வாமீ, நீங்கள் கூடக் கலக்கமடைவது விந்தையாக உளது. தயங்காது சொல்லுங்கள். (சிறிது பெருமூச்சு விட்டு) கல்நெஞ்சம் படைத்த எவனும் செய்யத் தயங்கும் கொடிய செயலையும் செய்த என் மனம் கலங்குமென்று நீங்கள் எண்ணவேண்டாம்.

வசிஷ்டர்: ஆம், ஆம். ராமா, மனைவியின்றி அஸ்வமேதத்தைச் செய்ய முடியாது என்பதை ஞாபகமூட்டுகிறேன்.

ராமன்: அதை நான் மறந்து விடவில்லை.

வசிஷ்டர்: அப்படியாகில் ஏகபத்தினி விரதன் என்ற பெயரை இழந்துவிட உறுதி கொண்டாயா?

ராமன்: குருநாதா! நீங்களும் ஐயமுறலாமா! ஒரு முறை செய்துள்ள உறுதியை மாற்றுவது சத்தியத்தைக் கடைப்பிடித்ததாகுமா?

வசிஷ்டர்: மிகவும் சந்தோஷம்! அப்படியானல் ஜானகி தேவியை மறுபடியும்...................

ராமன்: அவள் என் மனைவி. அவளே என் மனைவி. அவள் ஒருத்தியே என் பத்தினி. ஆனல் அவளை அழைப்பது நம் பிரஜைகளின் அபிப்பிராயத்தைப் புறக்கணிப்ப தற்குச் சமானமாகும்.

வசிஷ்டர்: எனக்கு விளங்காது பேசுகின்றனையே. ஒன்று மறுமுறை விவாகம் செய்துகொள்ள வேண்டும். அல்லது சீதா தேவியை மறுபடி ஏற்றுக்கொள்ள வேண்டும். வேறு வழியில்லை.

ராமன்: இரண்டும் இராமனல் செய்யக் கூடாதவை.

வசிஷ்டர்: யாகமும் செய்ய முடியாததே.

ராமன்: யாகத்துக்கு வேண்டியது மனைவிதானே. மனைவி இருக்கிருள். தங்கப்பதுமையான சீதையை யாகத் தினத்தன்று என் அருகில் வீற்றிருக்கக் காண்பீர்கள்.

வசிஷ்டர்: ஆ! அப்படியா? அரசனுடைய கடமை என்ன என்பதை நீ நன்கு உணர்ந்திருக்கிருய். நீ அறிந்து கொண்டதைச் செயலிலும் காட்டி வருகின்ருய். கணவன் ஒருவன் மனைவியோடு எத்தகைய இணக்கம் வைக்கவேண்டும்; பொதுநலத்தை முன்னிட்டு அந்த

இணக்கத்தை எப்படியெல்லாம் திருத்தியமைத்துக் கொள்ளவேண்டும் என்பதை அறிந்துள்ளவன் நீ ஒருவனே. மைந்தன் பெற்றோர்க்கு என்னென்ன பாங்கில் கடமைப்பட்டிருக்கிருன் என்பதை உன்னுடைய ஜீவிதம் தான் விளக்கிக் காட்டுகிறது. மனிதன் ஒருவன் என்னென்ன சூழ்நிலையில் எப்படி எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்வது சுலபமன்று. அதை உன்னுடைய வாழ்வு நன்கு எடுத்து விளக்கிக் காட்டுகிறது. அறவாழ்வுக்கு விளக்கமாக நீ இலங்குகிருய்.

*[சுதீக்ஷ்ண முனிவர் வருகிருர். ராமன் எழுந்திருக்கிருர்.]*

சுதீக்ஷ்ணர்: ராமா, உன் யாகத்தைப் பார்க்க வந்தோம். உன் செயல் ஒவ்வொன்றும் தர்மத்தின் விளக்கமாகிறது. குடிகளுக்கு நீ செய்யவேண்டிய கடமைகளையும், உன் குடும்பத்துக்கு நீ செய்யவேண்டிய கடமைகளையும் நன்கு வகுத்து வைத்து ஒன்றோடொன்று முரண்படாதவாறு அவைகளைச் செவ்வனே நீ செய்து வைக்கிருய். நீ தர்மகோப்தா. நல்லறம் காக்கும் நம்பி என்று உன்னையே நவிலவேண்டும்.

வேதவிதி வழுவாது நடைபெற்று வரும் உனது அச்வமேத யச்ஞத்தைக் காணப் பல ரிஷிகள் வந்திருக்கிருர்கள். அவர்களுக்கிடையில் சிற்சில வேளைகளில் இரண்டு பால யோகிகள் தென்படுகிருர்கள். கொஞ்சகாலத்திற்கு முன்பு அவர்கள் நம் ஆச்ரமத்துக்கும் வந்திருந்தார்கள். என்ன கட்டழகு! என்ன கம்பீரம்! என்ன ஞானம்! என்ன பணிவு! பகவத் சம்பத் அனைத்துக்கும் அவர்களே இருப்பிடம். ராமா, உனது

திவ்விய சரிதத்தை அற்புதமான காவியமாக அமைத்து அவர்கள் பாடுகிறார்கள். அந்தச் சரித்திராமிர்தத்தைப் பானம் பண்ணும் பாக்கியம் முனிவர்களுக்குத் தான் இதுவரை கிட்டியிருக்கிறது. இங்கு யாகசாலைக்கு வந்திருக்கும் முனிவர்களும் ஓய்வு வேளைகளில் அவ் விளைஞர்கள் வாக்கினின்று ஊற்றெடுத்துப் பெருகி வரும் கர்ணாமிர்தத்தைப் புசித்துப் பரமானந்தமடைந்து வருகின்றனர். முனிவர் அனைவரும் உனது கொலு மண்டபத்தில் வீற்றிருக்க, உனது ஒப்பற்ற சரிதத்தை, இராகவா, நீயும் கேட்பது உசிதம். இந்த யக்ஞத்தின் நடைமுறைக்கும் அது முற்றிலும் பொருத்தமானதாகும்.

ராமன்: முனீந்திரரே, உங்கள் உள்ளத்தின்படியே நடக்கட்டும். உங்கள் விருப்பத்திற்கும் மாறுதல் உண்டோ? அவர்கள் எங்கிருக்கின்றனரோ?

(குச லவனை அழைத்து வருகின்றனர்)

சந்திரகேது: அதோ வருகிறார்களே அவர்களா? என்ன ஆச்சரியம்! பெரியப்பா, குதிரையை நடாத்திக் கொண்டு போனபோது வனத்தில் இரண்டு முனிப் புதல்வர்களைச் சந்தித்த வரலாற்றை நான் உங்களுக்குச் சொன்னேனல்லவா? இதோ இந்த இருவரையும் தான் நான் சந்தித்துப் போராடிப் பிறகு உறவாடியது.

(குச லவன் வந்து சபையை வணங்குகிறார்கள்)

சுதீக்ஷ்ணர்: ராமா, இப்பொழுது பளீரென்று என் மனதில் ஓர் எண்ணம் தோன்றுகிறது. நான் அதை உனக்குத் தெரிவித்தால்தான் திருப்தியடைவேன்.

ராமன்: தேவரீர் திருவுளப்படி செய்யலாம்.

சுதீக்ஷ்ணர்: ரகுகுல திலகா, நீ விசுவாமித்திரருடன் காட்டுக்குச் சென்ற காட்சி இப்பொழுது என் நினைவுக்கு வருகிறது. அப்பொழுது நீ என்ன உயரமோ, என்ன நடையோ, என்ன முகச் சாயலோ, என்ன பேச்சோ, அவற்றை இவ்விருவரிடமும் காண்கிறேன். அக்காலத்தில் ஓர் ஓவியம் வரையப்பட்டிருந்தால் இராமனும் இக் குழந்தைகள் இருவரும் ஒருவரே என்ற உறுதி ஏற்பட்டிருக்கும்.

ராமன்: இளைஞர்காள், நீங்கள் இச்சிறுவனை (சந்திர கேதுவைக்காட்டி)எங்கேயாவது கண்டதுண்டா?

குசன்: ஆம் வேந்தே, நாங்கள் வனத்தில் விளையாடிக் கொண்டிருந்தபோது இவன் குதிரை என்று சொல்லப் படும் ஒரு மிருகத்தை ஓட்டி வந்தான். விளையாடுதற் காக நாங்கள் அதைப் பிடித்துக் கட்டிவிட்டோம். இவன் விதவிதமான அஸ்திரங்களைப் பிரயோகித்தான். பிரம்மாஸ்திரம் உட்பட அவையனைத்தையும் நாங்கள் முறியடித்தோம். பிறகு நாங்கள் உறவு கொண்டாடினோம். அவ்வுறவு இனி என்றும் மாருது.

ராமன்: அத்தனைவிதமான அஸ்திர வித்தைகளை உங்களுக்குக் கற்பித்தவர் யார்?

குசன்: யாரும் கற்பிக்கவில்லை. நாங்களே எங்கள் தவ வலிவால் உணர்ந்துள்ளோம்.

ராமன்: (தனக்குத்தானே) என்ன ஆச்சரியம்! இம் முனிப் புதல்வர்கள் பிரயோகித்த அஸ்திரங்கள் அலாதியாக நம் இக்ஷ்வாகு குல வம்சத்துக்குரியன என்று எண்ணியிருந்தேன். இதைத் தாங்களே உணர்ந்துகொண்ட இவர்கள் யாராயிருக்கக் கூடும்?

ராமன்: (சிறிது யோசித்துவிட்டு) நீங்கள் யார்?

குசன்: நாங்கள் வால்மீகி முனிவரின் ஆச்ரமவாசிகள்.

ராமன்: உங்கள் தாய் இருக்கின்றாளா?

குசன்: இருக்கிறாள்.

ராமன்: பெயரென்ன?

குசன்: பெயரா? தாய்தான்.

ராமன்: தந்தை யார்?

குசன்: தெரியாது. எவர் தந்தையென்று முனிவராவது தாயாவது சொல்லியதில்லை.

ராமன்: அப்படியானால் தந்தையின் கடமையை ஆற்றியவர் யார்?

குசன்: வால்மீகி முனிவர்.

ராமன்: வால்மீகி முனிவரை அழைத்துவர முடியுமா?

லவன்: நாங்கள் இருப்பது போதாதா? தங்களுக்காக அவரை ஏன் இங்கு அழைத்துவர வேண்டும்?

சுதீக்ஷ்ணர்: ரகுராமா, வால்மீகி மஹரிஷியும் வந்துகொண்டிருக்கிறார் என்று கேள்விப்படுகிறேன். அதற்கிடையில் இவர்கள் பாடும் ராமசரிதத்தைக் கேட்போம். அதன் பொருட்டே நாம் இவர்களை இங்கு அழைத்திருக்கிறோம். (குசலவனைப் பார்த்து) பிள்ளைகாள், இராமாயணத்தில் ஏதேனும் ஒரு சிறுபகுதியை இப்பொழுது பாடுங்கள் பார்ப்போம்.

(இருவரும் பாடுகின்றனர்)

तपःस्वाध्यायनिरतं तपस्वी वाग्विदां वरं ।
नारदं परिपप्रच्छ वाल्मीकिर्मुनिपुङ्गवम् ॥

தப: ஸ்வாத்யாயநிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம்
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர்முனி புங்கவம்

कोन्वस्मिन् सांप्रतं लोके गुणवान् कश्च वीर्यवान् ।
धर्मज्ञश्च कृतज्ञश्च सत्यवाक्यो दृढव्रतः ॥

கோன்வஸ்மின் ஸாம்ப்ரதம் லோகே குணவான் கஸ்ச
[வீர்யவான்
தர்மக்ஞஸ்ச க்ருதக்ஞஸ்ச ஸத்யவாக்யோ த்ருடவ்ரத:

चारित्रेण च को युक्तः सर्वभूतेषु को हितः ।
विद्वान् कः कः समर्थश्च कश्चैकप्रियदर्शनः ।

சாரித்ரேண ச கோ யுக்த: ஸர்வபூதேஷு கோ ஹித:
வித்வான் க: க: ஸமர்த்தஸ்ச கஸ்சைகப்ரியதர்சன:

आत्मवान् को जितक्रोधो द्युतिमान् कोऽनसूयकः ।
कस्य बिभ्यति देवाश्च जातरोषस्य संयुगे ॥

ஆத்மவான் கோ ஜிதக்ரோதோ த்யுதிமான் கோ அன
[ஸூயக:
கஸ்ய பிப்யதி தேவாஸ்ச ஜாதரோஷஸ்ய ஸம்யுகே

एतदिच्छाम्यहं श्रोतुम् परं कौतूहलं हि मे ।
महर्षे त्वं समर्थोऽसि ज्ञातुमेवंविधं नरम् ॥

ஏததிச்சாம்யஹம் ஸ்ரோதும் பரம் கௌதூஹலம் ஹி மே
மஹர்ஷே த்வம் ஸமர்த்தோ அஸி ஞாதுமேவம்விதம் நரம்

श्रुत्वा चैतत् त्रिलोकज्ञः वाल्मीकेर्नारदो वचः ।
श्रूयतामिति चामन्त्र्य प्रहृष्टो वाक्यमब्रवीत् ॥

ச்ருத்வா சைதத் த்ரிலோகக்ஞ: வால்மீகேர்நாரதோ வச:
ச்ரூயதாமிதி சாமன்த்ர்ய ப்ரஹ்ருஷ்டோ வாக்யமப்ரவீத்

बहवो दुर्लभाश्चैव ये त्वया कीर्तिता गुणाः ।
मुने वक्ष्याम्यहं बुद्ध्वा तैर्युक्तः श्रूयतां नरः ॥

பஹவோ துர்லபாஸ்சைவ யே த்வயா கீர்த்திதா குணா:
முனே வக்ஷ்யாம்யஹம் புத்த்வா தைர்யுக்த:ச்ரூயதாம் நர:

इक्ष्वाकुवंशप्रभवो रामो नाम जनैः श्रुतः ।
नियतात्मा महावीर्यो द्युतिमान् धृतिमान् वशी ॥

இக்ஷ்வாகுவம்சப்ரபவோ ராமோ நாம ஜனை: ச்ருத:
நியதாத்மா மஹாவீர்யோ த்யுதிமான் த்ருதிமான் வசீ

दशवर्षसहस्राणि दशवर्षशतानि च ।
रामो राज्यमुपासित्वा ब्रह्मलोकं प्रयास्यति ॥

தசவர்ஷஸஹஸ்ராணி தசவர்ஷசதானி ச
ராமோ ராஜ்யமுபாஸித்வா ப்ரஹ்மலோகம் ப்ரயாஸ்யதி

इदं पवित्रं पापघ्नं पुण्यं वेदैश्च संमितं ।
यः पठेद्रामचरितम् सर्वपापैः प्रमुच्यते ॥

இதம் பவித்ரம் பாபக்னம் புண்யம் வேதைஸ்ச ஸம்மிதம்
ய: படேத்ராமசரிதம் ஸர்வபாபை: ப்ரமுச்யதே

லக்ஷ்மணன்: *(தனக்குத்தானே) ஸீதாதேவியின் குரல் அப்படியே இவர்களிடத்தில் அமைந்திருக்கிறதே!*

ராமன்: *தேஜஸ் நிறைந்த தவப்புதல்வர்களே, இதோ இத்தட்டிலுள்ள தங்கக்கட்டிகளையும் ரத்தினங்களையும் சம்மானமாக மனமுவந்து ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுகிறேன்.*

குசன்: *சீ! இதுதான் உலகத்தவர் போக்கு. கழுகு வானத்தில் உயரப் பறக்கிறது. ஆனால் கீழே எங்கு செத்த*

பிணம் கிடக்கிறது என்று தேடுகிறது. அது போன்று உலகத்தவர் எதையும் பணத்தைக்கொண்டே மதிப்புப் போடுகின்றனர். பணம் படைத்த கயவனையும் பெரிய வனாக உலகம் மதிக்கிறது. என்ன பைத்தியக்காரத் தனம்? என்னை மன்னியுங்கள். உங்கள் திரவியம் உங்களோடு இருக்கட்டும். வனத்தில் தவம் புரிந்து தெய்வ நெறி சார்ந்துள்ள எங்களுக்கு அவை ஒன்றுக் கும் உதவா. அவைகளைப்பற்றி நினைக்குமளவு நாங்கள் கடவுளை மறக்க வேண்டியதாகும். அதற்கு நாங்கள் ஒருப்படோம்.

ராமன்: (லக்ஷ்மணனைப் பார்த்து) தம்பி, என்ன வீரம், என்ன தியாக புத்தி! இது தவசிகளுடைய தனிச் சிறப்பல்ல. பொருளையும் போகத்தையும் யார் துச்ச மெனப் புறக்கணிக்கின்றாரோ, அவரே நாட்டை நன்கு ஆளவல்லவராவார். அவரே பொதுநல சேவைக்குத் தகுந்தவராவார். அவருக்குத்தான் மக்களிடத்து உண் மையான அன்பு வரும்.

(வால்மீகி வருகிறார். எல்லாரும் வணங்குகிறார்கள்.)

முனி சிரேஷ்டரே, உங்களுக்கு நல்வரவு ஆகுக. இப் பிள்ளைகள் இருவரும் யார் என்ற ஐயம் இச்சபையி லுள்ளவர்களுக்கெல்லாம் ஏற்பட்டிருக்கிறது. தாங்கள் தான் அந்த ஐயத்தை அகற்றவேண்டும்.

வால்மீகி: அவர்கள் இரட்டையர்கள். நம் ஆச்ரமத்தைச் சேர்ந்தவர்கள்.

ராமன்: தேவே, அது போதாது.

வால்மீகி: ஏன் போதாது?

ராமன்: இவ்விருவரையும் பற்றிப் பலபேர் பலவிதமான அனுமானங்களை ஊகிக்கின்றனர். மற்றொரு முக்கிய விஷயம். இக்ஷ்வாகு வம்சத்தவர்களாகிய எங்களுக்கு மட்டும் தெரிந்துள்ள சில அஸ்திர வித்தைகளை இவர்கள் எப்படித் தெரிந்துகொண்டார்கள்?

வால்மீகி: இவர்கள் ஸீதாதேவியின் தவப் புதல்வர்கள்.

ராமன்: எந்த ஸீதாதேவி?

வால்மீகி: எந்த ஸீதாதேவியா? உலகமறிந்தது ஒரு ஸீதைதான். உன் தர்மபத்னீ ஸீதாதேவி.

ராமன்: அவள் கற்புடையவள் என்று நீங்கள் இச்சபை நடுவே உறுதிமொழி கூற முடியுமா?

வால்மீகி: ராமா, உன்னை நான் ஒரு கேள்வி கேட்கிறேன். ஸீதை கற்புடையவளா, அல்லவா என்பதைப் பற்றி உன்னுடைய சொந்த அபிப்பிராயம் என்ன?

ராமன்: அவள் கற்பினுக்கு அரசி என்பதையும், தாய்மையே வடிவெடுத்தவள் என்பதையும் நன்கு அறிவேன்.

வால்மீகி: பின்பு அவள் கர்ப்பிணியாயிருந்தபோது நேரில் குற்றம் சாட்டாது வஞ்சகமாக அவளை ஏன் வனத்துக்கு அனுப்பினாய்?

ராமன்: என் மனைவி குற்றமற்றவள் என்று பிரஜைகளுக்கு நான் சமாதானம் சொல்லுவது பொருந்தாது. அரசன் குடிகளுக்கு வழிகாட்டியாக இருந்தாக வேண்டும். பிரஜையின் பிரதிநிதியாக நான் குற்றம் சாட்டுகிறேன். தவ வேந்தராகிய தாங்கள் அவளது தாய்மைக்கு அத்தாட்சியாவீர்களா?

வால்மீகி: ஸீதாதேவியின் தூய்மைக்கு ஸீதாதேவியே சான்று. இதோ, இப்பொழுது அவள் அதை நிரூபிக்கப் போகிறாள். விண்ணவரும் மண்ணவரும் கண்டு கொள்வீர்களாக.

( ஸீதை வருகிறாள். )

ஸீதை: தந்தை தாயற்ற எனக்கு ஐம்பூதங்களில் முதல் பூதமான பூதேவி ஆதரவுடன் அன்னையானாள். நான் கணவனைத் தெய்வம் எனக் கருதிக் கானகம் சென்ற போது முட்களிலும் கற்களிலும் என் பாதங்கள் வருந்தாது காத்தாள். கானில் தனியே இருந்த என்னை அரக்கன் தூக்கிச் செல்லுகையில் என் தூய்மைக்கு அவளே சாட்சியாக இருந்தாள். அசோக வனத்தில் தனியே கொடிய அரக்கிகளுக்கிடையில் இருந்தபொழுதும் பூதேவியே சாட்சியானாள்.

இரண்டாம் பூதமான தண்ணீரும் என்னைத் தேடவந்த மணாளனுக்குத் தடையாக இருக்கக்கூடாது என்று தன் தன்மைக்கு மாறாகப் பாலம் கட்ட உதவிற்று.

மூன்றாம் பூதமான தீயும் தென் இலங்கையில் என்னைச் சோதனை செய்த பொழுது என் தூய்மையை வெளிப்படுத்தியது. என் பக்தனான ஹனுமானுக்குக் குளிர்ந்திருந்து என் தூய்மையை வெளிப்படுத்தியது.

நான்காவது, ஐந்தாவது பூதங்களான வாயுவும் ஆகாயமும் எல்லாக் காலங்களிலும் என் தூய்மைக்கு சாட்சிகளாக இருந்து வருகின்றன.

ஐந்து பூதங்களாலாகிய இவ்வுடலினுடைய தூய்மைக்கும் ஐம்பூதங்களே சாட்சிகளாகும். அவற்றிடமே என்னைப் பங்கிட்டுவிடப் போகிறேன்.

என் ஞானத் தந்தையாகிய வால்மீகி மஹரிஷியின் அருளினல் என் தவக்குழந்தைகளுக்கு உயர்ந்த கல்வி கிடைத்தது. அவர்களின் தந்தை இதோ வீற்றிருக்கும் பிரபு. அவர்களை மனமுவந்து ஏற்கவேண்டும் இது ஒன்றே என் விருப்பம். என் கணவனையும் லக்ஷ்மணனையும் தவிர வேறு எவரும் அறிய முடியாத, உயர்ந்த, எவர்க்கும் கிட்டாத அஸ்திரங்கள் தாமாகத் தோன்றியதொன்றே என் தூய்மையை நிரூபிக்கும்.

வால்மீகி முனிவர் என்னை ஏற்றுக் காத்து வந்துள்ளது நான் தூயவள் என்பதற்கு மற்ஜெரு சாக்ஷி.

எக்காரணத்தை முன்னிட்டும் என் கணவன்மீது நான் ஒருபொழுதும் சினந்து கொண்டதில்லை. இராவணனைக் கொன்றபின் நான் ஆவலுடன் அவர் அருகில் வந்தேன். அவரோ கடுஞ்சொல் சொல்லி என்னை விரட்டினர். அதற்கு நான் அவரை நொந்து கொள்ளக் கிடையாது. முன் அறிவிப்பில்லாது என் கணவன் என்னைக் கானகத்தில் விட்டு விட்டார். அதைக் குறித்து நான் அவரிடம் சினந்து கொள்ளவில்லை. அரசகுலத்தில் வாழவேண்டிய என் தவப்புதல்வர்கள் தந்தை யாரெனத் தெரியாது வாழ்ந்தபோதோ, தாயான என் உண்மையை அவர்கள் அறியாது வாழ்ந்தபோதோ என் கணவன் மீது நான் தீய எண்ணம் ஒன்றும் எண்ணவில்லை. இது சத்தியம். இப்பொழுதும் அதே அன்பு.

குழந்தைகளே, தக்க இடத்தில் உங்களை ஒப்புவித்து விட்டேன். சுகமாக வாழுங்கள். தாயின் உண்மை நிலை தெரிந்து நீங்கள் மகிழ்வைக் காணும் பேறு எனக்கில்லை. கானகத்தில் புறக்கணிக்கப்பட்டவுடன் என் உடலை ஐம் பூதங்களுக்கு நான் பங்கிட்டுக் கொடுத்திருப்பேன். அதற்

கேற்ற உறுதியும் தூய்மையும் என்னிடத்துண்டு. உங்களைப் பெற்றெடுத்தற் பொருட்டும் வளர்த்தற் பொருட்டும் இந்த உடலை இத்தனை நாள் வைத்திருந்தேன். அக்கடமை முடிந்து விட்டது. தக்க இடத்தில் உங்களை ஒப்படைத்தாய் விட்டது; சுகமாய் வாழ்ந்திருங்கள். உங்கள் தாயாகிய என் வடிவத்தைக் கண்டு இனி நீங்கள் மகிழமாட்டீர்கள். ஆனால் அதைக் குறித்து நீங்கள் வருத்தப்படவேண்டாம். உங்களிடம் விடை பெறுகிறேன். என் ஆருயிர்த் துணைவா, என்னை மணந்த மணாளா, நம்மிருவருக்குள் எப்பொழுதும் மனவேற்றுமையில்லை. ஆனால் நீங்கள் என்னை மணந்து பெற்ற இன்பம் எதுவுமில்லை. நான் பிரிவதனால் புதிதான துன்பம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை.

மைத்துனர்களே, வளர்ப்புத் தந்தை வால்மீகி முனிவரே, விடைபெறுகிறேன். அன்னை பூமாதேவி, என் தூய்மையை நீயே நிரூபிப்பாயாக. மற்றுமொருமுறை உன்னையே அடைகிறேன்.

(ஸீதை விருத்தம்)

ராகம்: மோஹனம்

பூவில் வாழயனும் எனைப்புரந்தான் முதலோர் போற்றும்
காவியங் கண்ணியே நற்கருணையின் வடிவே பூமா
தேவி நீ என்னைப் பெற்ற சீர்பெறும் தாயேயானால்
மேவி உன்னோடுவாழ விரைந்திடம் தருகுவாயே.

பெற்ற தாயினும் சாலப் பரிந்து உன் விசாலமான உடலில் எனக்கோரிடம் அளிக்க மாட்டாயா?

(கைகூப்பி நிற்கிருள், பூமி பிளக்கிறது. ஸீதை மறைகிருள். பூமி மூடிக்கொள்கிறது.)

ராமன்: இதென்ன அக்ரமம்? என் ஆட்சியில் இது ஏற்படலாமா? பூமாதேவி! சமுத்திர ராஜனுக்கு ஏற்பட்ட நிலையை நீ அறியாயா? சீதையைத் திருப்பிக் கொடுத்துவிடு. இல்லையேல் இதோ உன்னை அழிக்கப் போகிறேன்.

(அம்பை எடுக்கிருன்)

வால்மீகி: ராமா, போதும் உன் பராக்கிரமம். போதும் உன் பூலோக லீலை. சீதை யதாஸ்தானம் போய்ச் சேர்ந்து விட்டாள். குழந்தைகளுக்கு முடிசூட்டு. பிறகு நீயும் வைகுண்டத்துக்கு எழுந்தருளு. உனது நரலோக லீலையை ஒரு முடிவுக்குக்கொண்டு வருவதற்கே நாமும் இங்கு வந்துள்ளோம்.

ராமன்: சுவாமீ, தங்கள் விருப்பப்படியே ஆகுக.

மங்களம்

ரகுபதி ராகவ ராஜாராம்
பதித பாவன ஸீதாராம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்தினின்று
வெளிவரும்

# தர்ம சக்கரம்

## திங்கள் வெளியீடு

இது இந்தியாவின் பண்பைப் போதிக்கிறது பாரமார்த்திகத்தைப் பரப்புகிறது. சமயக்கொள்கைகளை விளக்குகிறது. சமயத்தில் புகுந்துள்ள கசடுகளை அகற்றுகிறது. பைந்தமிழைப் பேணுகிறது.

அறிவு வளர்ச்சிக்கு—ஆத்மீக முன்னேற்றத்திற்கு — இல்லற வாழ்விற்கு இணையற்ற பொக்கிஷம். பல அனுபவ ஆராய்ச்சிக் கட்டுரைகள், ஆன்றோர் அறிவுரைகள் அனைத்தும் தாங்கி 1952 ஜனவரி முதல் வெளிவந்து கொண்டிருக்கிறது. விவரங்களுக்கு எழுதித் தெரிந்துகொள்க.

திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா

காரியதரிசி
தர்ம சக்கரம்



விலை ரூ. 2-00